

# செந்தமிழ்ச்செல்வி

திங்கள் வெளியீடு

## இரண்டாஞ் சிலம்பு


இதழாசிரிய கூட்டத் தலைவர்:

**கா. சுப்பிரமணியபிள்ளை,**

எம்.ஏ., எம்.எல்., அட்வகேட்.



திருநெல்வேலி தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக

லிமிடெட்

[illegible]

**The South India Saiva Siddhanta Works**
**Publishing Society, Tinnevelly, Ltd,**
**Tinnevelly & Madras.**

# உள்ளுறை

வெறுஞ்சிறுமொழி:—வேலூர், க. ப. சந்தோஷம் ௯௮, ௨௧௯
மதிப்புரை:— ௫௨, ௬௪௮, ௬௮௮, ௨௩௨, ௩௨௰, ௪௬௯

---

## குறிப்புக்கள்



---

## திருவுருவப்புகைப் படங்கள்

க. திருநெல்வேலி, ஸ்ரீகாந்திமதியம்மை கோவில் பொற்றாமரைக் குளம்
உ. ,, தத்துவப்பிரகாசமண்டபம்
ந. ,, ஸ்ரீ நெல்லையப்பர் கோவில் அறுகாற் பீடம்
ச. ,, விஷ்ணுநந்தி
ரு. சீகாழிக் கோயிற் றிருக்குளம் (2 தோற்றம்)
சா. திருநெல்வேலி, ஸ்ரீ நெல்லையப்பர் கோவில் சந்நிதி

---



(க) திருநெல்வேலி ஸ்ரீ காந்திமதியம்மை கோவில் பொற்றாமரைக் குளம்.

ஓம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது.

| | | |
|---|---|---|
| சிலம்பு உ. | மெய்கண்டான் ஆண்டு-எாக தைத் திங்கள் 1924௵ ஜனவரி—பிப்பிரவரி௴ | பரல் க. |

திருச்சிற்றம்பலம்.

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்.

---

## சைவ சித்தாந்த வரலாறு

(சிவநெறி வரலாறு)

சைவம் சித்தாந்தம் என்ற இரு சொற்களின் பொருளை முதற்கண் ஆராய்ந்து கொண்டு பின் அவ்விரண்டினுனுமாகிய தொடர்மொழிப் பொருளின் வரலாற்றை ஆராய்வாம். **சைவம்** என்றது சிவம் என்னுஞ் செந்தமிழ்ச் சொல்லடியாய்ப் பிறந்து சிவனொடு தொடர்புடைமை என்னும் பொருளில் வழங்குவது. சிவனைப்பற்றிய நிலையையும் சைவ நூல்களையும் சிவனடி சேர்

தற்குரிய நெறியையும் அச்சொற்குறிக்கும். **சித்தாந்தம்** என்பது **சித்த அந்தம்** என்ற இரு சொற்களால் ஆகி முடியின் முடிபு என்று பொருள் பெறும். சைவ நூல்களின் முடிந்த முடிபைக் கூறும் நூல்களைச் **சைவ சித்தாந்த** மென்ப. அச்சைவ சித்தாந்த நூல்கள் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானை எளிதில் எய்துதற்குரிய நெறி யாதெனக் காட்டுவது. அந்நெறியே கடவுளை நாடிச் செல்லும் நெறிகள் பலவற்றுள்ளும் தலை சிறந்ததாகலின் **சேக்கிழார் சுவாமிகள்** அதனை 'முதற் சைவ நெறி' யென்றார். அந் நெறியே முதல்வனோடு கலத்தலாகிய திருவை அளிக்கவல்லதாகலின் **திருமூலமாமுனிவர்** அதனைத் 'திருநெறி' யென்றார். 'திருநெறிய தமிழ்' என்றதும் அது. **திரு** வென்பதும் **சிவம்** என்பதும் ஒத்த பொருளுடையன. உண்மைத் திருவுடையோன் சிவனென அறிஞர் இனிதுணர்வராகலின் **திருநெறி** யென்ற விடத்து முடிபுணர்த்தும் சொல் வேண்டிய தின்றாயிற்று. இதனை அறியாத பல்வேறு மக்கட் குழாங்கள் வேழங் காண்பான் சென்ற விழியிலார் ஒப்பத் தத்தம் புல்லறிவுக்குத் தோன்றியவாறு திருவிலா நெறி பலவற்றைத் திருவுடையவாகக் கருதி மயங்குவர். அன்னோர்க்கு முடிபாயவழி இஃதே யென உணர்த்த நின்றது **சித்தாந்த** மென்னும் சொற்றொடர்.

மலைத் தலைமீதுள்ள மாண்பெருமாடத்திற்குச் செல்லும் வழியானது மலைக்கு அருகிலுள்ள நிலத்திலும் படிப்படியாகக் கடந்து செல்லும் குன்றுகளிலும் உள்ள தங்கிடங்கட்கும் வழியாக அமைதல்போல, முழுமுதற் கடவுளை நாடிச் செல்லும் நெறியின் பகுதிகளாகப் பிறநெறிகள் அமையும். ஆதலால் உயிரில்லாத பூதங்களையும் உயிரையும் உயிர் வகைப்பட்ட சிறு [illegible]ங்களையும் முடிந்த பொருளெனக் கொள்வாரது சிறு நெ[illegible]ளைப் பகுதியாகப் பெற்று அவற்றைக் கடந்து முதல்வ நெறிக[illegible]ரே செல்வது நமது திருநெறியாதலின் அதனைப் [illegible]ளிடம் [illegible]ன்றார் பெரியர். முகில்களைக் கடந்து ஓங்கிச் **பெருநெறி** யெ[illegible]யானது பகல் முழுவதும் இடையீடின்றிச் செல்லும் உயர் நெற[illegible]

கதிரவன் ஒளி பெற்றுத் திகழ்வதொப்பப் புறச்சமய வெல்லை கடந்து செல்லும் சிவநெறி திருவருளொளி பெற்று மிளிர்வ தால் அதனை 'ஒளிநெறி' யென்றும் பணித்தனர் உயர்ந்தோர். "தாயுடன் சென்று பின் தாதையைக் கூடி" என்பதற் கிணங்க சிவனது திருவருளாலே அவன் தாள் வணங்கிய அன்பர்க்குச் சுட்டறி வொழித்துப் பேரறிவு நல்கும் பெருமான் தாமே வலிந் தாட்கொள்ளும் பான்மைபற்றி நமது திருநெறியைக் குருநெறி யென்றுங் கூறுவர் அறிஞர். இச் சிவநெறி யெய்தி னோர் ஒன்றியிருந்து சுட்டற நினைக்கும் ஒருமைச் சார்பின ராதலின் அவர் நெறியை ஒருநெறி யென்றும் வழங்கு முலகம்.

இவ்வொரு நெறியே அறிவு நூல்களில் முடிந்த முடிபாகக் கொள்ளுதற் குரியது என்பது அந்நெறிச் சென்ற பேரறிஞ ராகிய சைவ சித்தாந்திகள் தமது நுகர்ச்சியின் பயனைக் கூறும் அருட் பனுவல்களின் வைத்தும் அளவை நூல் முறைக் கேற்ப உலகம், உயிர், கடவுள் என்பவற்றின் இயல்புந் தொடர்பும், அவற்றை யுணர்ந்த உயிர் செல்லும் நெறியும், எய்தும் பயனும் ஆகிய இவற்றைப் பல்லாற்றானும் வகுத்துத் தெள்ளிதின் அறிவுறுத்தும் சித்தாந்த அருள் நூல்களில் வைத்தும் யாம் உணரற் பாலம்.

நற்கலை கற்று யோகம் பயின்று பதமுத்தி எய்துதற்குரிய ஞான மெய்தித் தம்மையும் தலைவனையு முணர்ந்தோரே சைவ சித்தாந்த ராவார் என்பது,

'கற்பன கற்றுக் கலைமன்னு மெய்யோக
முற்பத ஞான முறைமுறை நாடியே
தொற்பத மேவித் துரிசற்று மேலான
தற்பரங் கண்டுளோர்சைவ சித்தாந்தரே'

என்னும் திருமந்திரத்தால் அப்பெற்றித்தாய பெரியோர் நமது திருநெறித் தலைவர் என்பது அவர்களது அருளுரைகளால் இனிது விளங்கும்.

திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் தேவாரம் பின்வருவன:—

'போதையார் பொற்கிண்ணத் தடிசில் பொல்லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்'

'கழுமல முதுபதிக் கவுணிய னறியும்
அனைய தன்மையை யாதலின் நின்னை
நினைய வல்லவ ரில்லைநீள் நிலத்தே.'

முதற் றிருப்பாட்டிலே தமக்கு முதல்வன் தையலோடு மெழுந் தருளி ஞான வாரமுத மீந்ததை விதந்தோதினமை காண்க. இரண்டாவது திருப்பாட்டிலே முதல்வனைச் சுட்டிறந் தறியு மாற்றல் அவனது பொருட்காட்சி பெற்ற தம்மைப்போன் ரூர்க்கே யன்றி ஏனையோர்க் கெளிதல தென்றதைக் குறிப்பித் தார். இவ்வாறே நமது சொற்கோவும் கூறியருளினமை வரும் தேவாரத்தாற் புலனும்.

'ஒருத்தரா லறிய வொண்ணுத் திருவுடைய சோதீ
நிருத்தநான் காணவேண்டி நேர்பட வந்தவாறே'

'தேடிக் கண்டுகொண்டேன் றிருமாலொடு நான்முகனும்
தேடிக் காணொணுத் தேவனை யென்னுளே
தேடிக் கண்டு கொண்டேன்'

'தெள்ளத் தேறித் தெளிந்து தித்திப்பதோர்
உள்ளத் தேற லமுத வொளிவெளி
கள்ளத்தே கடியேன் கவலைக் கடல்
வெள்ளத் தேனுக் கெவ்வாறு விளைந்ததே.'

இத் திருப்பாட்டுக்களிலே தமக்குப் பேரறிவுச் சுடர் கொளுத் தும் வண்ணம் இறைவன் எழுந்தருளிக் காட்சி யளித்ததையும், காண்டற்கரிய முதல்வனைத் தமது நுகர்ச்சியின்கட் பெற்றது தஞ்செயலற்றுத் தாமற்றவிடத் தென்பதையும் முதல்வன்பால் எய்தும் முடிவிலின்ப நுகர்ச்சி தமக்குக் கைவந்த திறத்தையும்

நாயனார் தெள்ளிதின் விளக்கி யருளினமை காண்க. நமது ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள்,

'நாயேன் பலநாளு நினைப்பின்றி மனத்துன்னைப்
பேயாய்த் திரிந்தெய்த்தேன் பெறலாகா வருள்பெற்றேன்
வேயார் பெண்ணைத் தென்பால்வெண்ணை நல்லூரருட்டுறையுள்
ஆயாவுனக் காளாயினி யல்லே னெனலாமே''

என்றும்,

'ஏழிசையா யிசைப்பயனா யின்னமுதா யென்னுடைய
தோழனுமா யான்செய்யுந் துரிசுகளுக் குடனாகி
மாழையொண்கண் பரவையைத் தந்தாண்டானை மதியில்லா
ஏழையேன் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே'

என்றும்,

'இந்திரன் மால்பிரம னெழிலார்மிகு தேவரெல்லாம்
வந்தெதிர் கொள்ளவென்னை மத்தயானை யருள்புரிந்து'

என்றும் திருவாய் மலர்ந்தருளிய விடத்து 'முதல்வனுக்கு 'மீளாவடிமையாய்த தாம்பெறலாகா வருள் பெற்ற திறத்தையும் தம் பெருமை யறியாத அண்ணல், தம் மன்பராய தமக்கு எளிவந்தருளித் தோழனாய் வேண்டுவன உற்றுழி யுதவி யாட்கொண்ட வண்ணத்தையும், அரி யயன் முதலியோ ரேத்தும் பெருவாழ்வு தமக்கு முதல்வ னீந்தமையும் விளக்கி யருளினமை காண்க. நமது மணிவாசகப் பெருந்தகையார்,

'தன்னே ரில்லோன் றானேயான தன்மை
என்னே ரனையோர் கேட்கவந் தியம்பி
அறை கூவி யாட் கொண்டருளி'

என்றும்,

'புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானுந் தேறினன் காண்க
அவனெனை யாட்கொண் டருளினன் காண்க'

என்றும்,

'புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயத்
தத்த மதங்களிற் றட்டுளுப்புப் பட்டுநிற்கச்
சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்
அத்தன் கருணையினாற் றோணோக்க மாடாமோ'

என்றும்,

'உவலைச் சமயங்க ளொவ்வாத சாத்திரமாம்
சவலைக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறும்
கவலைக் கெடுத்துக் கழலிணைகள் தந்தருளும்
செயலைப் பரவிநாம் தெள்ளேணங் கொட்டாமோ'

என்றும் அருளிச் செய்த திருப்பாட்டுக்களானே முதல்வன் தமக்குத் தன் பேரியல்பு ஈதெனத் தம்மை வலிந்து ஆட்கொண்டு அறிவுறுத்தருளினமையும், முழுமுதற் கடவுள் தம்மை யாட்கொள்ளப் போந்தமையைத் தாம் தெளிந்தமையும் தமது சிற்றறிவு கொண்டு கலைஞானத்தான் முதல்வனை புணரப் புக்கார் தட்டழிந் துழல்வரென்றமையும், திருவருணோக்கத்தாற் றமக்கு உண்மை யறிவு தலைப்படத் தாம் பயன்பெற்றமையும் பசுமரத்தாணிபோற் புலனாவது காண்க.

இனி, சித்தாந்த நூல் உரைக்கும் பொருளின் சுருக்கம் உணர்ந்து, அதன்பின் சித்தாந்த வரலாற்றினை யொருவாறு ஆராயப் புகுவாம். உலகத்திலுள்ள பொருள்களுள் உயிருள்ளன, அறிவுடையன, உயிரில்லன, அறிவில்லாதன. அறிவுள்ளது இயக்க அறிவில்லாதது இயங்கும். பின்னையது தானாகவே இயங்காது. உயிர் இயக்க உடம்பு இயங்கும். தானாகவே இயங்குதல் இல்லை. துயின்ற காலத்தும் உயிருண்மை பற்றியே உடம்பின் உட்கருவிகள் இயங்குவதும் அது பிரிந்த போது அவை யியங்காமையும் தெள்ளிது. கண்டமை வைத்துக் காணுதலை யறியவேண்டும். உயிர்களை வேறு பிரித் தெண்ணுங்கால், இப்பெருஞாலமானது உயிரில் பொருட்பிண்டமாகக் காணப்படுதலின் அது தோன்றி நின்று மறையும் வண்ணம் தன்னை யியக்கும் ஓர் முதல்வனை இன்றி யமையாதது. அற்றன்று,

ஞாலம் தானே இயங்குமெனக் கொள்ளின் இழுக்கென்னை யெனின், அஃது உண்மையாமெனில் உயிரில் பொருளாய கல் முதலியன தாமே யியங்கவேண்டும். அங்ஙனம் அவை யியங்கக் கண்டிலமாதலின் அக்கொள்கை நிலைபெறாது.

உலகின் பகுதிகளே ஞாயிறு, விண்மீன், நானிலம் முதலியவாகக் காணப்படும். அவைகள், ஒழுங்குபெறத் தம்முள் இயங்குவன இயற்பொருள் நூலறிவால் விளங்கும். ஞாலப் பகுதிகள் தோன்றி நின்று மறையுமிடத்து ஞாலமுற்றுமே அவ்வாறாம். ஞாலமோ அளப்பருந் தன்மையது. ஆதலால், அஃது அளவிலாற்றலுடைய ஓர் முழுமுதற் பெருமானை வேண்டி நிற்குமென்பது ஊகிக்கப்படும். உயிர் அறிவுளதாயினும் உடம்பில் பற்றுள்ளது. உடம்பு ஞாலத்தின் பகுதியாம். உடம்பின் பற்றுக் காரணமாகத் தோன்றி மறைதலாகிய பிறப்பிறப்பு உயிர்க்கும் அமையும். ஆதலால் உயிர் தன்வய மில்லாதது. ஞாலம் முதல்வனது ஆட்சிக் குட்பட்டு நடப்பது. இங்ஙனம் உயிர் உடம்பினிற் றுவக்குண்டு கிடப்பதொப்ப முதல்வனும் ஞாலத்திற் றுவக்குண்ணுனோ வென்னின் உண்ணுன். என்னை? அறிவற்ற வுலகில் துவக்குண்டால் அவன் தன் பொருட்டு ஞாலத்தை வேண்டும். அவ்வாறு வேண்டின் முதல்வன் ஞாலத்திற்கும் இழிந்தவனுவன். அவ்வாறாயின் அறிவில்லது அறிவுடையதின் மேலாம். ஆகவே, அறிவில்லதை முறைப்பட இயக்குதல் அறிவுடையதற்கு இயலாது. இதனுல் ஞால முதல்வன் தன்வய முடையனென்பது புலனும். இக்காரணம்பற்றியே முதல்வனுக்கு உலகத்தோடுள்ள தொடர்பு அவனது முற்றறிவிற்கு இழுக்காகாமை காண்க.

துவக்குண்ணுத முதல்வன் முற்றறிவுடையனெனவே துவக்குண்ணும் உயிர் சிற்றறிவுடையதென்பது போதரும். தன்வயமுடைய தலைவன் ஞாலத்தை இயக்குதல் தன்பொருட்டு அன்று என்பது தெளிவு. ஞாலத்தின் பொருட்டென்றலும் கூடாது; அறிவும் நுகர்ச்சியும் அதற்கின்மையின் இதனுல்

இறைவன் உலகைத் தொழிற்படுத்துவது உயிரின் பொருட் டென்பதே முடிகின்றது.

உலக உவர்ப்பு வந்த உயிர் முதல்வனைப் பற்றுவது எதனு லெனின் தானே தனித்து இயங்கும் ஆற்றல் அதற்கு இன் மையாலென்க. அஃதெவ்வாறுமெனின் தனித்தியங்குமாயின் தானே அறியும் ஆற்றலுடையதாகவேண்டும். அங்ஙனம் இயற்கை அறிவுடையதாயின் உயிர் எஞ்ஞான்றும் உலகிற் கட் டுண்ண இடமில்லை. கட்டுண்மை தெளிவாதலால் உயிர் அறி விக்க அறியும் இயல்பிற்று. ஆதலால் அறிவிக்கும் ஒரு முதல் வனை அஃது என்றும் வேண்டியே நிற்கும். கட்டுள்ள காலத்து உலகைப்பற்றி நின்ற உயிர்க்குக் கட்டொழிந்த காலை முதல்வனை யின்றி வேறு தாரக மின்மையின் அவனை நாடிப்பற்றும் என்று முற்கூறப்பட்டது. முதல்வன் உயிரையாவது உலகையாவது தன் பொருட்டு வேண்டுபவனல்லன். உலகின் மூலமாகிய மாயையை முதல்வன் தொழிற் படுத்துவதற்குக் காரணம் உயி ரின் மீது வைத்த பேரருளேயாம். ஆகவே உயிரையும் உல கையும் இறைவனோடு தொடர்பு படுத்துவது அவனது திரு வருளேயாகும். ஆதலால் முதல்வன் (படைப்பு முதலிய) ஐந் தொழில் நடத்துவதற்குத் திருவருளே காரணமாதலின் அத் திருவருளைத் தாயென வழங்குவர் பெரியோர். எல்லாந் திரு வருளென்பது,

உருவருள் குணங்களோடு முணர்வரு ளுருவிற் றோன்றும்
கருமமு மருளரன்றன் கரசர ணாதி சாங்கந்
தருமரு ளுபாங்கமெல்லாந் தான ருடனக்கொன் றின்றி
யருளுரு வுயிருக்கென்றே யாக்கின னசிந்த னன்றே.

(சித்தியார்)

முதல்வன் இயற்கை அறிவினனுதலாலும் உயிர் செயற்கை யறிவுடையதாதலாலும் முதல்வன்கணின்று உயிர் தோன்றிய தென்று கொள்ள இடமில்லை. உலக மூலமாகிய மாயை அறி வில்லதாகலின் அதுவும் அறிவுடைய பொருளினின்று பிறப்பது

அல்ல. ஆதலின் கடவுள், உயிர், உலகம் என்ற மூன்றும் வெவ்வேறே. முதல்வனது திருவருளொன்றுமே மூன்றையும் தொடர்பு படுத்துவதாம்.

இதுகாறும் கூறியதின் வைத்து சித்தாந்த உண்மையை விரித்து உணர்ந்து கொள்க. இனி அதன் வரலாற்றை ஆராய்வாம்:—

தமிழ் மொழியிலே சித்தாந்தக் கொள்கைகள் எப்போது எவ்வாறு எழுவதாயின வென்னும் வினவுக்கு விடையே இவண் ஆராயத்தக்கது. மக்கள் யாவரும் முதலில் ஓரிடத்தில் தோன்றிப் பின் பல இடங்கட்கும் சென்று வாழ்ந்து, காலஞ் செல்லச் செல்ல இடம் முதலிய பல காரணங்களால் தம்முள் வேற்றுமைப்பட்டுப் பல்வேறு வகையினர் ஆயினர் என்று யாக்கை நூல் வல்லார் கூறுவர். அங்ஙனம் உலகெங்கும் பரவுதற்கு முன்னர் அவர்க்குள் மொழி தோன்றிய தெனில் தோன்றிய அம்மொழியினின்றே உலகின்கண் உள்ள பல மொழியும் எழுந்தனவெனக் கருத இடமுண்டு. அவ்வாறன்றி மக்கட் கூட்டத்தினர் வெவ்வேறு நாடுகளில் தங்கியபின் வெவ்வேறு மொழிகள் எழுவதாயின வென்பர் சிலர். எவ்வாறாயினும் மக்கள் வெவ்வேறு நாடுகளில் தங்கித் தமது பொது வாழ்க்கையைச் செவ்வைப்படுத்திய பின்னர்த்தான் அவர்க்குள் வழங்கும் மொழிகளிலே தத்துவ வுணர்ச்சியைக் குறிக்கும் சொற்கள் எழுந்து நிலைபெறும் என்பது இயல்பே.

இப் படைப்பின் தொடக்கத்திலேயே முற்படைப்பில் அறிவும் தவமும் முதிர்ந்த பெரியோர் தோன்றி மொழியையும் நூலையும் தோற்றுவித்து வளர்த்தன ரெனினும், அவர்கள் தத்துவ வுணர்ச்சியைக் குறிக்க வழங்கும் சொற்கள், தம் பொருளை யறிந்து போற்றும் ஆற்றல் இல்லாத மக்கள் நடுவே நிலைப்பது அரிது ஆதலின் அத்தகைய சொற்கள் எழுந்து நிலவா நிற்கும் மக்கட் கூட்டத்தாருட் சிலராதல் தத்துவ வுணர்ச்சி யுடையார் என்று கோடற்கு யாதும் இழுக்கில்லை.

சொற்கள் எழுந்த பின்னே நூல்கள் எழுவது இயல்பு. நூல்கள் அழிந்து போயினும் மொழி உள்ளளவும் சொற்கள் சிலவாதல் இருந்தே தீரும். ஆதலால் நூல்கள் முதலிய சரித்திர ஆராய்ச்சிக் கருவிகள் ஒழிந்து போயினும் சொல்லாராய்ச்சி பெரிதும் பயன்படவல்லதே. இது நிற்க.

சைவசித்தாந்தம் வேதாகம சாரமாகலாலும் வேதாகமங்கள் வடமொழியிலிருப்பதாலும் ஆரியத்தினின்றே தமிழிற்கு சைவக் கொள்கைகள் வந்தனவென்பர் ஒருவகையார். இக்கொள்கையுடையாருட் சிலர் ஆரியமும் தமிழும் தமிழரது மொழியேயென்பர். ஆரியத்தின் சிதைவாகத் தமிழ் இருந்தாலன்றி ஆரியரும் தமிழரும் ஒரு வகையினரென்று கொள்வதற்கிடமில்லை. தத்துவ வுணர்ச்சி ஒரு வகையாரிடம் முதற்கண் உண்டாய்ப் பிறிதொரு வகையார்க்குப் பின் பயன்பட்டிருக்கலாம். அல்லது இருவகையாரும் தாம்தாம் ஒருசிறிது தத்துவ வுணர்ச்சி முன்னெய்திப் பின் கலந்து அதனை விரிவு செய்திருத்தலுங் கூடும். ஆரியத்தினின்றே தமிழரது ஒழுக்கம் ஞானம் முதலியன எழுந்ததென்று கூறுவது எத்துணைப் பொருத்தமுடையதென்பதைப் பின்வரும் ஆராய்ச்சியின் வைத்துக் காண்க.

**உரை, கருதல், காண்டல்** என்னும் மூன்று அளவைகளுள் முதல் நின்றதைக் கடைப்பிடித்து ஆராயுமிடத்து அறிஞர் ஆரியத்தையுந் தமிழையும் ஒரு பெற்றித்தாகக் கருதுவது புலனும்.

‘ தமிழ்ச்சொல் வடசொல் லெனுமிவ் விரண்டும்
உணர்த்து மவனை யுணர லுமாமே ’

‘ ஆரியமும் தமிழும் உடனல்கி காரிகையார்க்குங்
கருணை செய்தானே ’

என்ற திருமூலர் திருவாக்கினை இடைச்செருகல் என்று கூறுவாருமுளர். தத்தமது கருத்துக்கு இசையாதனவற்றை அவ்வாறு கூறுவது ஒரு கொள்கைபற்றினார்க்கு இயல்பாதலினாலும்

இடைச் செருகுவதும் ஒரு தீய வழக்கமாக நின்று நிலவுவதா லும் பிற இரண்டு அளவைகட்கும் ஒத்துவரும் உரையே கொள்ளற் பாற்றென்பது முடியும். இரண்டாவது மேற்கோ ளுள் உடன் என்றதனுல் ஆரியத்தினின்றே ஞான நூற் கொள்கைகள் தமிழிற்கு வந்தனவென்று கோடல் பொருத்த மில்லாததே. இம்மேற்கோளைப் புகுத்தலென்பார் 'தமிழ்ச் சொலும் வட சொலும் தாணிழற் சேர' 'தமிழினீர்மை பேசித் தாளம் வீணை பண்ணினல்ல முழவமொந்தை மல்குபாடல் செய்கையிட மோவார்' முதலியவாக, திருஞான சம்பந்த மூர்த்தி நாயனர் தேவாரத்துள்ளும், பிற திருமுறைகளிலும் காணும் பல மேற்கோள்களையும் புகுத்தலென்பாரோ யாம் அறியேம்.

இனிச் செந்தமிழ் நிலத்து வழக்கினை நன்கு உணர்ந்து இயல் நூல் செய்த ஆசிரியர் தொல்காப்பியனுர் தமிழ்நாட்டு மக்கள் வகையினை வாகைத்திணையுட் சுட்டுவான் ஓதிய "அறு வகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்" என்ற முதற் குறிப்புச் சூத்திரத்துள் மூன்று காலமும் உணரவல்ல ஞானம் பெற்ற அறிவர் என்பாரும் அவர் சொல்வழி நின்றொழுகும் எண்வகை தாபதப் பக்கத்தாரும் தமிழ் நாட்டிற்குரியாரெனக் குறித்த இடத்தும் அறிவராகிய நிறைமொழி மாந்தர் பண் டைத் தமிழிற் போந்த எழுவகை இலக்கியங்களுட் சிறந்த மறைகள் இயற்றினுரெனக் குறித்தவிடத்தும் அவர் ஆரியரென வும் அவர் இயற்றியது வடநூற் சார்பாயதெனவும் கூறுமை காண்க. அங்ஙனங் கொள்வோர் தமிழ் நிலத்து வழக்குக் கூறும் இயல்நூலின் இயல்பு அறியாதவராவர். மேற்சுட்டிய தொல்காப்பியச் சூத்திரங்களாலே யாம் உணர்ந்து கொள்வது யாதெனின் தமிழ்நாட்டிலே இறைவனது திருவருள் பெற்றுத் தமிழ் மக்கட்கு ஒளி நெறி காட்டவல்ல பெரியோர் தமிழ்ப் பெருமக்களாய் விளங்கினரெனவும் அவர்வழி நின்றொழுகு வார் எண் வகைப்பட்டன ரெனவும் அவர்கள் தாம் கண்ட அரிய நூற்பொருளையும் கடவுளருள் பெறு முறையையும் உணர் விக்கக் கருதி இயற்றியருளிய நூல்கள் மறை யெனப்படுமென்ப தும் ஆம்.

வடநாட்டு ஆரிய முனிவரைத் தொல்காப்பியனார் ஐய ரென்று ஓரிடத்திற் கூறியுள்ளார்.

'பொய்யும் வழுவும் புகுந்த பின்னர்
ஐயர் யாத்தனர் கரண மென்ப'

என்ற இடத்துக் காண்க. ஐயரென்பது ஆரியரென்பதன் சிதைவாம். ஐயர் என்பதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் இருடிக ளென்றது காண்க. தமிழ் நாட்டு அறிவர் இருடிகளென விசேடிக்கப்படுவதில்லை. அறிவர் அருளிய நூலை ஆசிரியர் நச்சினார்க்கினியர் காலத்தும் ஆகமம் என்ற பெயரால் குறிப்பது வழக்கம் என்று தெரிகிறது.

(தொடரும்.)

கா. சுப்பிரமணியபிள்ளை M.A., M.L.

---

# தமிழ்ப்புலவர் வரலாறு:

## அகத்தியர்.

(முதற் சிலம்பு உஉகூ-ம் பக்கத் தொடர்ச்சி)

சிலர் தமிழ் அகத்தியர் வேறு, ஆரிய அகஸ்தியர் வேறு என்கின்றனர். இருவராயினும் அகத்தியர்க்கு அகஸ்தியரும், அகஸ்தியர்க்கு அகத்தியருமே ஒப்பானவரென்று கூறல் வேண்டும். அன்னோர் பெருமைக்குச் சான்றாகப் புராணங்களில் வழங்கும் வரலாறுகள் அளவிறந்தன. அவற்றில் இவை தமிழ் முனிவர்க் குரியன, இவை ஆரிய முனிவர்க் குரியன என்று பிரித்துக் காட்டுதல் எமக்கு இயலுவதொன்றன்று. அன்றியும் அன்னார் புரிந்தனவாகக் கேட்கப்பெறும் அரும் பெருஞ் செயல் களை நோக்கின் அவர், தமிழர் ஆரியர் என்று கருதும் நம் கருத்தின் அளவினரல்லர் என்பது போதரும். அங்ஙனமாயி னும் தொன்று தொட்டு நம் பெருமக்கள் பல்லோரானும் தமிழ்

முனி என்று பாராட்டப்பெற்ற அகத்தியனாரை நாமும் அங்ஙனம் கூறுவதால் எய்தற்பாலதோர் இழுக்கில்லை யென்க.

புவிதுலை யொக்க வீற்றிருந்ததும், விந்தமடக்கியதும், காவிரி கொணர்ந்ததும் முதலியவெல்லாம் பொதியி லகத்தியர்க்கே உரியனவாகப் புராணம் கூறுகின்றது. இராமபிரானாலும் வழிபாடுபெற்ற அகத்தியரைத் தமிழ் முனியென்றே இராமாயணங் கூறுகின்றது. இவற்றிலிருந்து தமிழ் முனிவர் இராமாயணக் காலத்தும் அதற்கு முன்னும் விளங்கியிருந்தனர் என்று கூறலாகும். மற்றும் அகத்தியர் இராவணனைக் கந்தருவத்தாற் பிணித்தமையும், காவிரிப்பூம்பட்டினத்திருந்த காந்தன் என்னும் சோழனானவன் அரசர் குலத்தைக் களைதலையே நோன்பாகக் கொண்ட பரசுராமன் தன்பாற் போர் குறித்து வருதலைக் கொற்றவையால் அறிந்து அகத்திய முனிவர் பக்கல் அடைந்தன னென்று மணிமேகலை கூறுவதும் அவர் எவ்வளவு பழங் காலத்தே தெற்கில் இருந்தவர் என்பதனைக் காட்டுவனவாகும்.

இனி, இறையனாரகப் பொருளுரை கூறும் முச்சங்க வரலாற்றைச் சான்றாகக் கொண்டு நோக்கின் அகத்தியர் ஏறக்குறையப் பன்னீராயிரம் ஆண்டுகளின் முன்னரே தென்மதுரையகத்துத் தலைச்சங்கத்தே வீற்றிருந்தனரெனவும், அக்காலத்திலேயே அகத்தியம இயற்றப்பட்ட தெனவும் கொள்ளுதல் சாலும். ஆனால் இறையனாரகப் பொருளுரை தலைச்சங்கப் புலவருள் முதல்வராக எடுத்தோதிய அகத்தியனாரை இடைச்சங்கப் புலவருள்ளும் முதல்வராக வைத்துக் கூறுகின்றது. அகத்தியர் தலைச் சங்கத்தின் தொடக்கத்திலேயே வீற்றிருந்தாரென்னில் அவர் வரம்பற்ற வாழ்நாள் உடைய ரென்பதே அவ்வுரையாளர் கருத்தாதல் வேண்டும். மற்று, சிவபிரான் கட்டளைப்படி அகத்தியர் நக்கீரனார்க்குத் தமிழ் இலக்கணம் அறிவுறுத்தருளினரென்று திருவிளையாடற் புராணம் கூறுகின்றது. அவ்வளவே யன்றி, சிவாலய முனிவர் மூவர் தேவாரங்களிலிருந்து இருபத்தைந்து திருப்பதிகங்களை எடுதததுத் திரட்டித்

தந்தருளினர் என்னும் வரலாறும் உண்டு. அகத்தியர் தேவார த் திரட்டின் திருப்பதிகக் கருத்துரைக்கும் ஓர் அகவலில்,

"இப்பரிச கத்திய முனிவ னிருநிலத்
தொப்பரு மூவ ரோதுதே வார
முழுதையுஞ் சிவாலய முனிக்கறி வித்துப்
பழுதிலா வவையுட் பரிந்தெடுத் திருபத்
தைந்துயர் பதிகமும் அறிவுறத் திரட்டி
யெண்ணரு மடங்கல் யாவையு முணரும்
புண்ணிய மிவைகொடு பொருந்து மென்றவன்
றனக்கருள் செய்தனன் றகவுற வதனால்
தீதிலா அகத்தியத் திரட்டினை யுலகில்
ஓதினர் அடங்கலும் ஓதின ராவரே"

என்று கூறியிருப்பதும் காண்க. அவ்வாறாயின் அகத்தியர் இப்பொழுதும் உளரென்றே கோடல் அமையும். சரித்திர ஆராய்ச்சியாளர் இது குறித்து யாது கூறுவரோ அறியேம். தவயோக சித்திபெற்ற பெரியார் பல்லாயிரம் ஆண்டுகளேயல்ல பல்லூழிக்காலம் வாழ்ந்திருத்தல் கூடுமென்பது யோக நூற்களின் துணிபு. அகத்தியரோ சித்தர் குழாத்திற்கெல்லாம் தலைவராவர் என்பர். அப்பெரியாரது வாழ்நாளை அறுதியிடப் புகுவது எம்மனோர்க்கு அடாததொன்றாகலின் அதனை இம்மட்டில் நிறுத்துதும்.

(தொடரும்)

பண்டிதா மு. வேங்கடசாமி நாட்டார்.

---

# மொழிகள் வெளியிடு முண்மை

(முதற் சிலம்பு ௩௮௨-ம் பக்கத் தொடர்ச்சி.)

(பழமை)

பழமை என்பது தொன்மை; தொன்மை எனுஞ் சொல் 'தொன்று' என வருதலை 'தொன்று தொட்டு' என்ற சொற்றொடரிற் காணலாம். இங்ஙனமே பழமை என்பது 'பண்டு' என வரும். 'பண்டு' என்பதற்குத் தெலுங்கில் 'பழம்'

என்று பொருள். 'பழுக்கவில்லை' என்பதைத் தெலுங்கர் 'பண்டலேது' என்பர். இதனால் பழமை, பண்டு, பழம் என்ற முச்சொற்களுந் தொடர்புடையன வென்பது புலனாகிறது. பழம் என்ற கிளவி 'பழு' என்ற முளையால் தோன்றுவதாக லின், 'பண்டு' என்பதிலும் 'பழு' என்பதே முளையாகு மெனல் பொருந்தும். இஃது எங்ஙனமாகுமென்பதைக் காண் பாம். ழகரத்தை வாயிற்கூட்டுவது எவருக்குஞ் சிறிது அரிது. இதனாற் கல்லார் பலவாறு அதைத் திரிதது வழங்குவர். தமிழ் நாட்டின் தென் பகுதியில் அது ளகரமாகும்; வடபாதியில் யகரமாகும். மேல்நாட்டார் அவ்வெழுத்தை அமைக்க முயல் வது நகைச் சுவைக்கு இடந்தரும். தெலுங்கில் ழகரம் டகர மாய் மாறும்; சிறுபான்மை வேறு எழுத்துக்களாய்த் திரிவது முண்டு. கோழி, ஏழு, இழு, கழுவு என்ற தமிழ் மொழிகள் முறையே, கோடி, ஏடு, ஈடு, கடுகு என வருதல் காண்க. இவ் வாறு 'பழு' என்பது 'படு' என நின்று, பின், டகரத்திற்கு இனமாகிய ணகரத்தை இடையில் ஒற்றாய்ப் பெற்று 'பண்டு' என்றாகியிருக்கவேண்டும். இதற்குப் பிறசான்று முண்டு. 'படுத்துக்கொள்' என்பதைத் தெலுங்கில் 'பண்டுகொ' என் பர். இதில் 'படு' என்பது 'பண்டு' என நிற்றல் கருதத் தக்கது. அன்றியும், கூடு, பூடு, என்ற தமிழ் மொழிகள் இடையில் ணகரத்தைப் பெற்று, கூண்டு, பூண்டு, என வருத லும் இவ்வாராய்ச்சிக்கு இயைபுடையதே.

பழுத்தல்=முற்றல், பழமை=முற்றியதன்மை, பண்டு=முற் றிய அல்லது இறந்தபொழுது. பழு என்பது இறந்தகாலத்தைக் காட்டுமென்பதைப் பழுமரம், தொன்மரம் என்பன ஒரு பொரு ளனவாய் ஆலமரத்தைக் குறிப்பதாலறிக. ஒரு நாள் அட்ட உணவு மறுநாளிருந்தால் அதை 'பழயது' என்று நாம் சொல் வதும் மேற்குறித்ததையே வற்புறுத்தும். பழம்=முற்றியது, நிறைவடைந்தது. தமிழ் ழகரம் நாக்கில் வராமையால் 'பழம்' என்பதை 'பலம்' என்பாருமுளர். வடமொழிப்புலவர் 'பலம்' என்ற சொல்லிற்கு எவ்வாறு பொருள் கூறுவரோ அறியோம். முகம் என்பதற்கு முன்பின் பொருந்தாத வீண் வரலாறு உண்

டாக்கித் தாமே மகிழ்வதுபோல் குறைத்துங் கூட்டியும், ஒட்டியும் சிதைத்தும் யாதாயினுமொன்று சொல்வர் என்றெண்ண வேண்டும். நிற்க, பழமொழி என்பதை முன்னுள் மொழி என்றுவது, முதிர்ந்து நிறைந்த மொழி என்றுவது பொருள் படுத்தலாம்; இரண்டுங் கூடியே பொதுவாகப் பழமொழிகள் ஏற்படும். வீட்டில் ஆடுகின்ற (சொக்கட்டான்) ஆட்டங்களில் 'பழம் பழுத்தல்' என்பது ஆட்டம் நிறைவு பெறுதலைக் காட்டும். ஏதாவது ஒன்று முடிந்ததோ இல்லையோ என்பதை வழக்கத்தில் காயா? பழமா? என்று கேட்கிறோம். பழுக்கா அல்லது பழுக்கை என்பது பொன்னிறத்திற்கு ஒரு பெயர். இந் நிறம் பழுத்தலாகிய நிகழ்ச்சியாலாவது கொண்டு அப்பெயர் பெற்றது போலும். பழுப்பு என்ற சொல்லும் இத்தகையதே. மஞ்சள் நிறத்தைத் தெலுங்கர் 'பசப்பு' என்று சொல்வர். இது பழுப்பு என்பதுடன் ஒற்றுமையுடையதே. 'மேனிபசத்தல்' என்பதை ஒப்பிடுக.

பழகல்=அறிமுகம் முதிர்தல், பயிலல். முதிர்ந்து நிலை பெற்ற நட்பை நிறைமொழி வள்ளலாகிய வள்ளுவர் 'பழமை' என்று இனிதாய்ச் சொல்வர். பழக்கம்=இணக்கம், தென்னுட்டு மக்கள், பழக்கம் என்பதை ஒரு அரிய பொருளில் வழங்குகிறார்கள். "நான் நேற்று அவனுடன் பழக்கமிட்டுக் கொண்டிருந்தேன்." என்று பேசுவதைத் திருநெல்வேலியில் பலவிடங்களில் பெரும்பான்மையுங் கேட்கலாம். பழக்கமிடுதல்= பேசுதல். பாட்டுக்களாலமைந்த நந்தனர் வரலாற்றின்கண் ஒரு நொண்டிச்சிந்தில் "சேரியில் வழக்கமில்லாதபடி பழக்கமிட்டான்" என்று வருகிறது. இப்பொருள் மிகவும் அருமையானது. ஏனெனில், பேச்சென்பது பழக்கத்திலாகிய ஒன்றே என்ற உண்மையைத் தமிழர் தொன்று தொட்டு அறிந்தவர்கள் என்று இதனல் அறியலாகிறது. இது நன்று ஆராயற்குரியது.

(தொடரும்)

க. பு. சந்தோஷம் B.A.,

# வால்மீகரும் கம்பரும்

(முதற் பால் சுருக ஆம் பக்கத் தொடர்ச்சி)

ஒரே பொருளைக் கொடுக்கும் சொற்றொடர்களைப் பலவகை மொழிகளிற் செய்து குழைவழியாக ஒலித்து ஒவ்வொரு மொழிச் சொற்றொடர்களும் உயிர்ப்புக் காற்று எவ்வெவ்வளவு செலவாக்கிக் கொள்ளுகின்றனவென ஆராய்ச்சி செய்ததில் தமிழ்ச்சொற்றொடர்களே மற்றெம் மொழித் தொடர்களினும் குறைவாகக் காற்றுகொண்டன. ஆரியச் சொற்றொடர்கள் தமிழைவிடக் குறைந்தது $1\frac{1}{2}$ முதல் மிகுந்தது 4 பங்குவரை காற்றுகொண்டன. சொற் செட்டுக்கு எடுத்துக் காட்டிய ஆரியச் செய்யுளையும் அதன் தமிழ் மொழி பெயர்ப்பையும் ஒலித்து ஒவ்வொன்றிற்கும் உயிர்ப்பு எவ்வளவு பிடிக்கிற தென்பதை ஒத்துப்பார்க்கலாம். காற்றுகொள்வதில் ஊதுகுழலுக்கும் உலையூது துருத்திக்கும் உள்ள வேற்றுமை தமிழிற்கும் ஆரியத்திற்கும் உண்டு.

இனி இசைச் செட்டைப் பற்றியும் சிறிது சொல்லி இக் கட்டுரையை முடித்தல் தகும். இயற்கையிற் கிளம்பும் ஒவ்வோரோசையும் குறிப்பான ஒவ்வொரு நிகழ்ச்சியை உணர்த்துகின்றது. எழுத்தோசைகளும் அவ்வாறே இயற்கை நிகழ்ச்சிகளைக் குறிப்பாக உணர்த்தவல்லன. அவ்வெழுத் தோசைகளைத் தொகுத்துச் சொற்களாக்குகிறபோது செயற்கைப் பொருள்கள் அதாவது மக்களால் கொடுக்கப்படுகிற குறிப்புப் பொருள்களை அவ்வோசைத் தொகுதிகள் காட்டுகின்றன. ஒலியெழுத் தோசை காட்டும் இயற்கைப்பொருள் ஊர் ஊருக்கு வேறு வேறாக விருக்கவில்லை. எடுத்துக்காட்டாக டகாரவொலியைக் கருதிப் பார்ப்போம். ஓர் முருட்டுப் பொருளானது மற்றொரு முருட்டுப் பொருளோடு எந்நாட்டில் முட்டிக்கொள்ளுமானாலும் டகாரவொலி பிறக்கின்றது. வெடிகளில் டகார வொலி கிளம்புகின்றது. இதில் முருட்டுப் பொருள்கள் பிரிந்து போகும் நிகழ்ச்சியை டகாரவொலி சொல்லுகின்றது. இம்மா

திரி ஒவ்வோ ரெழுத்தொலியும் ஒவ்வொரு குறிப்பான நிகழ்ச்சியை உணர்த்துதல் இவ்வையத்து எங்கும் ஒத்திருக்கும். ஆனால், செயற்கைச் சொற்களோ அவைகளை ஆக்கியவர்கள் இட்ட குறிப்புப்படி பொருள் வேறு வேறு கொடுக்கும். 'மோர்' என்று ஆங்கிலத்திற் சொன்னால் 'இன்னும்' என்று உணர்த்தும், அதையே தமிழிற் சொன்னால் **கடைந்த தயிர்** எனவுணர்த்தும். **போல்** என்று ஆங்கிலத்திற் சொன்னால் நீட்டக் **கோலை** யுணர்த்தும், அதையே தமிழிற் சொன்னால் ஒப்ப என்றுணர்த்தும். இம்மாதிரியாக ஒலியொப்புமை இருந்தாலும் பொருள் ஒப்புமை செயற்கை மொழிகளிற் கிடையாது. ஒலியினுடைய இயற்கைப் பொருள் சிறந்ததா அல்லது செயற்கை அதாவது குறிப்புப் பொருள் சிறந்ததா வென்று உசாவின் இயற்கைப் பொருள்தான் சிறந்ததென்று பல்வகையாலும் மெய்ப்பிக்கவரும். இயற்கைப் பொருளைக் காட்டுவனவே தமிழில் இயற்சொற்க ளெனப்படுவன. இச்சொற்களே பெரும்பாலன.

கருபிருட்டு என்று வல்லோசைகளைச் சேர்த்து ஒரு கூட்டொலியாக்கி இந்தச் சொல்லுக்குப் பொருள் தழுவு என்று வைத்துக்கொள்ள மறுப்புண்டோ? அப்படியே மிஞினிமூனு என்று சில மெல்லோசைகளைச் சேர்த்து ஓர் சொல்லாக்கி இதற்குப் பொருள் எற்றிப்புடை என்று வைத்துக்கொள்ளவும் மறுப்புண்டோ? கருபிருட்டு, மிஞினிமூனு என்பன விரண்டும் மேற் குறித்த பொருள்களோடு தமிழிற் பொருந்தா. வேறு மொழிகளிற் பொருந்தலாம். தமிழில், வல்லோசைகள் அவைகளின் இயற்கைப் பொருளாகிய ஆணவம், செருக்கு, வெறுப்பு முதலாகிய கடுமையான பண்புகளை யுணர்த்தும் சொற்களில் இருந்து தமிழ் மொழி சிறிதும் தெரியாதோர்க்கும் ஓசையளவானே பொருளைக் குறிக்கும்படியாகத் தமிழ் மொழி யாக்கப்பட்டிருக்கின்றது. அப்படியே மெல்லோசைகள் காதலுணர்ச்சி, பணிவு, இரங்குதல் முதலாய இயற்கைப் பொருள்களைச் சொற்களில் நின்று வழங்கும்படிக்கும், இடையோசைகள்

உருக்கம், பரிவு முதலான பண்புகளை யுணர்த்தும்படிக்கும் **தமிழ் மொழி** அமைக்கப்பட் டிருக்கின்றது.

> "பெற்றாளே பெற்றாள் பிறர்நகைக்கப் பெற்றாள்
> எற்றோ மற்றெற்றோ மற்றெற்று"

என்பதிலுள்ள **வல்லோசைச் செறிவு** ஆணவ வுணர்ச்சியையும், "நானே யினியுன்னை வேண்டுவதில்லை நளினமலர்த், தேனே கபாடந் திறந்திடுவாய்" என்பதிலுள்ள **மெல்லோசைச் செறிவு** நயவுணர்ச்சியையும், "எழுவா யெவர்க்கு முதலாகி யீறொடிடை யாகி யெங்கு முளையாய் வழுவாதவர்க்கு வரமீய வல்லையவரால் வரங்கள் பெறுவாய்" என்பதிலுள்ள **இடையோசை** உருக்க வுணர்வையும் ஒலிப்பாலேயே உணர்த்தக் கூடியபடி ஓசைகளின் இயற்கைப் பொருள்களைத் தழுவித் **தமிழ்ச் சொற்கள்** அமைக்கப் பட்டிருக்கின்றன. தமிழின் மூவின மெய்யெழுத்துக்கள் முப் பண்பையும் மூவினங்களின் கலப்பு முப்பண்பின் கலப்பையும் காட்டுகின்றன. ஆங்கிலம் போன்ற பிறமொழிகளில் பெரும் பாலும் சொற்களிலுள்ள எழுத்தொலிகள் இயற்கைப் பொருள் களை யுணர்த்துத லிலவாகலின் முப்பண்புகளை யுணர்த்துதற் பொருட்டு அம்மொழியைப் பேசுவோர் உரப்பியும் அதிர்த் தும் அளபெடுத்தும் சொற்களின் எழுத்துக் கூட்டு ஒன்று ஒலிப்பு வேறொன்றாகப் பேசி முப்பண்புகளைப் புகட்டுகின்றனர். ஆரியத்திலும் ஓசைகளின் முப்பண்புப் பாங்கைப் பாராட்டிச் சொற்களமைக்கப் படவில்லை. இடி, உரும், ஏறு, மடங்கல், வெடி, இகலி என்பன தமிழில் இடி என்னும் பொருளன. பொருளுக் கேற்ற ஓசை யமைந்திருப்பது குறிக்கத்தக்கது. இவைகளுக்குத் தமிழில் வழங்கும் வடசொல் அசனி. இதன் ஓசையில் இடியின் தன்மையை உணர்த்தக் கூடிய தொன்று மில்லை. மெல்லிய தன்மை வாய்ந்த கவரிமாவிற்குத் தமிழ்ச் சொற்கள் மெல்லினவோசை மிடைந்த அன்னம், எகினம், ஓதிமம், நானம் என்பன. வடமொழியிலோ வல்லோசை மிடைந்த படகம், பட்டம் என்பன. எடுத்துக்காட்டுகளில் போது போக்காதபடி, ஆரியம் ஓசைகளின் இயற்கைப்

பொருள்களை நினைந்திருக்க வில்லை யென்பது உடன்பாட்டுப் பொருள்தரும் சொல்லோடு அகரத்தைச் சேர்த்து எதிர் மறைப் பொருளைக்கொள்ளும் ஓர் வழக்கத்தைச் சொல்லினும் சாலும். ஏனெனில், மென்மையான பண்பைக் குறிக்கும் ஓர் உடன்பாட்டுச் சொல்லோடு அகரத்தைச் சேர்த்தவளவில் வன்மையான பண்பைக் காட்டும் ஓசை எங்கிருந்துவரும்? தமிழில் உடன்பாட்டுச் சொல்லிற்கு ஓரோசைச் சேர்க்கையும் எதிர்மறைச் சொல்லிற்கு வேறோசைச் சேர்க்கையும் வழங்கி வருவதன் நுட்பமான நோக்கம் ஓசைச் செட்டில்லாத ஆரிய சொற்களோடு ஒத்துப்பார்க்க விளங்கும். ஆரியத்தில் சத்துரு, அசத்துரு என்பனவற்றில் ஓசை யொன்றே. தமிழில் இவை களுக்குப் பகைவன் வல்லோசை, நண்பன் மெல்லோசை. இப் படியே சந்துஷ்டி, அசந்துஷ்டி என்பனவற்றில் வடமொழியில் ஓசையொன்று. தமிழில் மகிழ்ச்சி, வெறுப்பு என்பனவற்றில் பண்பிற் கேற்ற வோசை. இப்படியே தைரியம், அதைரியம், நியமம், அநியமம், பேதம், அபேதம், சந்தர்ப்பம், அசந்தர்ப் பம், சம்மதம், அசம்மதம் என்பனபோன்ற ஆயிரக்கணக்கான ஆரியச் சொற்களில் உடன்பாட்டுப் பொருளிலும் எதிர்மறைப் பொருளிலும் ஓசை வேறுபடாது வருவனவற்றோடு, தமிழில் மிடுக்கு, கோழைமை, நெறி, வழுக்கு, வேற்றுமை, ஒப்புமை, வழவழுப்பு, சொரசொரப்பு, நயம், முரடு முதலானவ்வைகளில் உடன்பாட்டுப் பொருளில் வரும் ஓசைக்கு எதிர்மறைச் சொல்லி னோசை முற்றும் வேறாக இருப்பதை ஒத்துப்பார்க்கத் தமிழ் மொழியில் ஓசைகளின் இயற்கைப் பொருளை முற்றிலும் ஆண் டிருப்பதும் அதனால் இசைச் செட்டில் தமிழ்க்கிணையான வேறொரு மொழி காணக்கிடையா தென்பதும் தெள்ளென விளங்கும்.

இத்தகைமையான ஓசைப்பொலிவு வாய்ந்த செந்தமிழில் இம்முறையைத் தழுவாத பிற சொற்களைக் கலப்பதில் தமிழின் குரல் மாறி வேறு குரல் கிளம்பி பொருட்கும் ஒலிக்கு மொவ் வாது அழும் பொருளிற்குச் சிரிக்கு மோசையும், சிரிக்கும்

பொருளிற்கு அழூமோசையுமாகத் தலை தடுமாறிப் போகின்றது. ஓசை நயத்தை ஆளவேண்டியபடி பொருளுக்கியைய ஆங்காங்குக் கம்பர் ஆண்டிருக்கின்றனர். இவரெழுதியது பெரும் பாலும் செந்தமிழ்; வில்லிப்புத்தூரார் எழுதியதோ தமிழ்ச் சட்டை யணிந்த ஆரியமொழி. இவர் ஐந்திணையிலும் வழங்கிய பல்வேறுபட்ட பறை முழக்கங்களைத் தம் பாட்டில் முழக்கி விட்டனரேயன்றிச் சிற்சில விடங்களில் குருட்டடியாக நேர்ந்தது தவிர, அவ்வவ்விடங்களில் பொருளுக்கியைய ஓசையமைத்தனரில்லை. அவர் அமைக்க முயலினும் தாம் எழுதிய கலவைத் தமிழில் அமைக்க வியலாது.

சுருங்கச்சொல்லின் சோற்செட்டு, எழுத்துச்செட்டு, இசைச் செட்டு, உயிர்ப்புச்செட்டு ஆகியவைகள் ஒப்புயர்வற்று மலிந்தும் பரவெளிப் பண்பின் இலக்கணம் எதுவோ அதையே தனக்கிலக்கணமாகத் தானமைத்தும் (தமிழ் எழுத்துக்களின் மறைப் பொருள் (The Tamil Alphabet - Its mystic aspect) என்னும் சுவடியைப் பார்க்க.) இருக்கின்ற தமிழ்மொழியில் பிற மொழிகளைக் கலப்பதனால் இக்கலவைத் தமிழ் யவனர்களுடைய மோஹரம் விழாவில் செம்புள்ளி கரும்புள்ளி குத்தி யாடும் கூத்தரழகைப் பெற்றுவிடுகின்றது. அவ்வம்மொழியை அதன் சரக்குகளைக் கொண்டே உயர்த்துதலும் பெருக்கலும் பொருந்தும். அறிவிலும் மயிரிலும் வழுக்கைத் தலையையுடைய குறும்பாடு மேய்க்கி யொருவன் தனக்குக் குஞ்சியழகு வேண்டுவானானால் மற்றோராடவன் கழித்த மயிரை யொட்ட வைத்துக்கொள்வானா அன்றித் தன்னாட்சியில் குறும்பாடிருக்கிற தென்று அதன் சுருட்டை மயிரைச் சிரைத்துத் தன் வழுக்கைத் தலைக்கு ஒட்டவைத்துக்கொள்வானா? இந்தச் சிற்றறிவுங்கூடக் கவிழ்த்து விட்டு நாம் நந்தாய்மொழியை அந்தோ! ஆளப் புகுவதா?

செந்தமிழ் நெரடா யிருக்கிற தென்றும் வட சொற்கள் கலந்த தமிழ் எளிதாக விருக்கின்ற தென்றும் பலர் சொல்லுகின்றனர். செந்தமிழைக் கவிழ்த்துவிட்டு ஆரியத்தைக் கலந்து

வந்த குற்றத்தை யேற்றுக்கொள்ளாது செந்தமிழ்மீது குறை கூறுவது ஆங்கிலனொருவன் தமிழைவிட ஆங்கில மெளிதென்பதுபோலும். இப்போதுள்ள பள்ளிப்பிள்ளைகள் தமிழைப் பொருட்படுத்தாதுவிட்டு ஆங்கிலம் கற்றுத் தமிழில் ஆங்கிலம் கலந்து பேசுவதுபோல, ஆரியத்தில் மருட்சிகொண்டு அதனைப் பயின்று தமிழைக் கருதாது விடுத்து அதனோடு ஆரியத்தைக் கலந்து ஏழெட்டு நூற்றாண்டாக வழங்கி வந்ததனால் பார்த்துப் பார்த்துக் கேட்டுக் கேட்டுப் பழகி விட்டதனால் நந்தமிழாரியப் புலவர் போன்ற கற்றோர்க்குங்கூட இக்கலவைத் தமிழின் வெறுக்கத்தக்க தோற்றம் புலப்படவில்லை. இது மாத்திரமன்று, 'சிவத்தியானானந்தர்' காட்டி யிருக்கின்ற ஓரமான உள்ளப் போக்கினால் அந்தண மரபினரெனத் தோன்றுகின்றது. அவருக்குஞ் சரியே மற்றைத் தமிழந்தணர்களுக்குஞ் சரியே, என்னைப் போன்ற தமிழரென்போர்க்குஞ் சரி தமிழே தாய் மொழியாக விருக்கின்றது. அப்படியிருந்தும், தமிழிலேயே பிறந்து, தமிழிலேயே உயிர்த்து, தமிழிலேயே அழுது சிரித்து, தமிழிலேயே வளர்ந்து, தமிழிலேயே தம்மனைவி மக்களோடு குலவித் தமிழிலேயே வாழ்ந்து வரும் நம் தமிழந்தணரிற் பெரும்பாலார்க்குத் தமிழினிடத்து ஏன் நன்றியுணர்ச்சியிலதோ! அந்தோ! கெடுவினை! தமிழ்த்தாய் இந்நன்றி கொல் மக்களை யீன்றது. வேறு தொழிலிலிருக்கின்ற யான் தேடிக் கிடைத்த அரிய தமிழ்ப் பெருமைகள் மேற்கூறியவைகளானால் நந்தமிழாரியப் புலவர் போன்றவர்கள் ஓரமின்றித் தமிழை ஆயின் இன்னும் அரிய உண்மைகள் எத்தகைய புறப்படுமோ அறியோம். அவ்வாறு ஆராயப் புகின் கடலிற் கவிழ்ந்த தமிழகத்தை யல்லாவிட்டாலும் தமிழ் மொழியையாவது மீட்டுதல் எளிதே. இல்லாண்மை (Home Rule) வேண்டும் வேண்டும் என்று பறையறைந்து கதறுபவர் தங்கள் இல்லத்து மொழியை ஏன் கருதலிலரோ?

இப்போது மேற்கேயிருந்து வரும் புதுக் கொள்கைகளை யுணர்த்த சொற்க ளெங்கிருந்து எடுத்துக் கொள்வ தென்னும்

ஓர் கேள்வி மீதி நிற்கின்றது. இந்தப் புதுக் கொள்கைகள் தமிழுக்குப் புதிதானுல் ஆரியத்திற்கும் புதியனவே என்பதற்கு ஐயமே இல்லே. ஆரியத்தில் தாது பாடம் என்கிற பகுதிநூல் இப்போது இல்லாவிட்டாலும் தமிழின் முதிர்ச்சியைப் பார்க்கிறபோது பண்டைநாளில் இருந்திருக்கவேண்டுமென்றே நம்பவேண்டியிருக்கின்றது. நூல் இப்போது இல்லாதவரையில் முன்னிருந் திருந்தாலென்ன இல்லாமற் போயிருந்தாலென்ன வெனலாகும். பகுதிநூல் இல்லாவிட்டாலும் பகுதிகள் கூடவா அழிந்து போய்விட்டன ? யான் ஆராய்ந்த வரையில் ஆரிய தாது பாடத்திலுள்ள தாதுக்களுக்கு நேரான தமிழ்ப் பகுதிகள் இல்லாம லில்லே. தமிழிற் கிடைக்காதென நினேக்கும் தாதுக்களே ஆரியம் கற்ற பெரும்புலவர்கள் வெளியிடுவாராக. ஒவ்வொன்றிற்கும் தமிழ்ப் பகுதி எடுத்துக் கொடுக்க முடியுமென்றே திண்ணமாகச் சொல்லுகிறேன். தமிழிற் பகுதிகள் நிறைந்திருக்கிறபோது ஆரிய தாதுக்களுக்குச் செல்வானேன். ஒவ்வொரு புதுக் கொள்கையும் புறப்பட்டதும் ஆரியச் சொற்களே இயற்றிக்கொள்ள முற்படுகின்றனர். அதனினும் எளிதாயதும், தனக்குப் பொருந்தக் கூடியதுமாய தமிழிலேயே ஏன் இயற்றிக்கொள்ளக்கூடாது. என்னிலும் நன்ருகத் தமிழ்த் தொடர்கள் செய்யக்கூடியவர்கள் பலருளரேனும் அவர்கள் உறக்கத்தி லிருப்பதாலும், விழித்துள்ளோர் ஆரியக் காமாலே நோயிற் சுருண்டு கிடப்பதாலும் நான் எடுத்த கட்சிக்காகவாவது சிற்சில சொற்களே அமைத்துக் காட்டக் கடமைப்பட்டிருக்கின்றேன்.

ஆரியத் தொடர்களில் காற்றடைத்த பைபோல உயிர்ப் பொலிப் பெருக்கமும் எழுத்து மிகையும் இருப்பது நீளத்திலும் குறிக்கலாகும்.

சுதேசமித்திரன் (8 எழுத்து) நாட்டு நண்பன் (7 எழுத்து) Swadesamitran.

தூரதிருஷ்டிக் கண்ணுடி (11 எழுத்து) தொலே நோக்காடி (6 எழுத்து) Telescope.

த்விசக்கரம் (7 எழுத்து) ஈருருளி (4 எழுத்து) Bicycle.
த்ரிசக்கரம் (7 எழுத்து) மூவுருளி (4 எழுத்து) Tricycle.
சதுர்சக்கரம் (8 எழுத்து) நாலுருளி (4 எழுத்து) Four-wheeler.
அநேகசக்கரம் (8 எழுத்து) பல்லுருளி (5 எழுத்து) Many-wheeled.
குணகாரம் (5 எழுத்து) மாறல் (3 எழுத்து) அல்லது பெருக்கல் Multiplication.
குணியம் (4 எழுத்து) பெருகி (3 எழுத்து) Multiplicand.
குணகம் (4 ௸) பெருக்கி (4 ௸) Multiplier.
குணலப்தம் (6 ௸) பெருகு (3 ௸) அல்லது பெருக்கம் Multiple.
இலம்பகம் (6 ௸) தொங்கி (4 ௸) அல்லது தொங்கடம் Pendulum.
சுவாசாசயம் (6 ௸) உயிரி (3 ௸) அல்லது மூச்சுப்பை Lungs.
சமீகரணம் (6 ௸) இணைவு (3 ௸) Equation.
தசாம்சம் (5 ௸) பதின்முறை (5 ௸) Decimal System.
பூஜ்யம் (4 ௸) சுன் (2 ௸) Zero.
தசாம்சப்புள்ளி (8 ௸) பதின்புள்ளி (6 ௸) Decimal Point.
வேகவிருத்தி (6 ௸) முன்னீடு (4 ௸) Acceleration.
வேகக்ஷயம் (6 ௸) பின்னீடு (4 ௸) Retardation.
சாமர்த்தியம் (7 ௸) வன்மை (3 ௸) Power.
ஸ்திதிஸ்தாபகம் (8 ௸) மீட்சி (3 ௸) Elasticity.
மிசிரப்பொருள் (7 ௸) கலவை (3 ௸) Mixture.
சம்யோகப்பொருள் (8 ௸) சேர்வை (3 ௸) Compound.
சாதாரண வாயு (6 ௸) காற்று (3 ௸) Atmosphere.

தமிழ்ச் சொற்கள் ஆக்கிக்கோடற்கு எட்டாதன வல்லவென்பதற்கே மேலே மாதிரி காட்டியிருக்கின்றது. அவ்வாறு காட்டியவற்றினும் அழகான தமிழ்ச் சொற்களை நமது தமிழாரியப்புலவர் அமைக்ககில்லாதவரல்லர். ஆனால் அவருடைய

ஓரம்போன உள்ளம் அவ்வழி திரும்புவதுதான் மெத்தவருமை. இதற்கே ஒரு நீண்டவுரை வெளியிடவேற்ற பொருளை இவ்விடம் நீட்டிக்கப் பொருந்தாது. ஆனாலும் மேனாட்டவர்களும் புதிது புதிதாகத்தான் இயற்கையுண்மைகளைக் கண்டறிந்து வந்திருக்கின்றனர், காணக்காணவே புதுச்சொற்களை இயற்றிக்கொண்டு வந்திருக்கின்றனர். அவ்வாறியற்றுவதிலும் ஏதோவுயர்ந்த எட்டற்கரிய கிட்டற்கரிய கடவுட்டன்மை வாய்ந்த அருட்சொற்களை யாக்கிவிடவில்லை. நாம் நம்மொழியில் மேற்கத்தைய சொற்களைவிட பொருளாழமுள்ளவைகளை இயற்றிக்கொள்ளலாமென்பதற்கு அவர்களுடைய Palaeontology என்னும் 'தோல்லுயிர் நூல்' கேட்டால் திடுக்கிடும்படியான ஒலிச்செறிவோடு கொடுக்கின்ற சில சொற்களும் அதற்குச் சரியான தமிழும் சொல்லி முடித்துவிடுகிறேன்.

| தமிழ் | ஆங்கிலத்தில் வழங்கும் இலத்தீன். With English meaning. |
|---|---|
| தொல்லுயிர் நூல் | Palaeontology (Science of fossils) |
| கவுளழகி | Compsognathus (Elegant Jaws) |
| கடாக்கொம்பு | Diceras (Ram's horns) |
| செதுக்குப்பல் | Glyptodon (Sculptured tooth) |
| பெருவிலங்கு | Megatherium (Great beast) |
| இடிமூஞ்சி | Brontops (Thunder face) |
| குதிரைவாலி | Equasetum (Horse tail) Plant |
| கடலல்லி | Dendracrenus (Sea Lily) a sea insect |
| கத்திவாலி | Xiphosura (Sword tails) Do |
| ஆந்தைத்தலை | Stringo Cephalers (Owl headed) do |
| கைமா | Cheiro theriwer (Hand beast) do |
| குட்டித்திருடன் | Micro lests (Little thief) an insect |
| ஓடுகால் விலங்கு | Dromatherium (Running beast) |
| இடிகவுளி | Bronto Saurus (Thunder Lizard) |
| கால்கவுளி | Scelids Saurus (Leg Lizard) |
| மோட்டுக்கவுளி | Stego Saurus (Roof Lizard) |

| | |
|---|---|
| உடுமீன் | Palae asterina (Star fish) |
| அண்டைக்கவுளி | Palseo Saurus (Neighbour Lizard) |
| மேற்குப்புள் | Hesperornis (Bird of the west) |
| சிவமா | Sivatherium (Sivas beast) |
| இருமுன்பல் | Duprotodem (Two grant teeth) |
| பெருங்கவுளி | Magals Saurus (Great Lizard) |
| முக்கொம்பு மூஞ்சி | Triceratog (Three horn face) |
| பைமீளி | Thylacleo (Pouch Lion) |
| விசிறியிப்பி | Pecten (Fan shell) |

இந்நெட்டுரையில் யான் எடுத்துக்காட்ட முயன்றது, தமிழ் மொழியானது (1) சிறு சொற்களால் விரிந்த பொருள்களைக் காட்டும் எழுத்துச் செட்டுடைய தென்பதும், (2) சுருங்கிய சொற்றொடர்களால் பரந்த உட்கோள்களை யுணர்த்தும் சொற்செட்டுடைய தென்பதும், (3) எவ்வளவு குறைந்த மூச்சுச் செலவால் ஒருவர்க்கொருவர் உரையாடல் கூடுமோ அவ்வளவு உயிர்ப்புச் செட்டும் உடையதென்பதும், (4) ஆண்மை, காதல், மருட்சி ஆகிய முப்பண்புக்களையும் அவைகளின் பல்வேறுன கலவை யுணர்ச்சிகளையும் சொற்பொருள் தேடாமலே எழுத்தோசையானே மேம்பாடாக உணர்த்தக்கூடிய இசைச்செட்டு வாய்ந்ததென்பதும், (5) இத்தகைய மாண்புகளில் உலக மொழிகளில் ஒப்புயர்வற்றதென்பதும், (6) எப்பொருட்கும் பொதுவாய இயற்கை யுண்மைகளை தன் இலக்கணத்தில் திருத்தமாக உணர்த்துகிறதென்பதும், (7) இம்முறைகளைத் தழுவாத பிறமொழிச் சொற்களை, தன்னுட் கலப்பதனால் தன் மாண்பழிகிறதென்பதும், (8) கம்பர் மேற்சொன்ன அழகுகளைச் சிதைக்காது கூடியவரைச் செந்தமிழிற் செய்த நூலையுடைத்தாயிருக்கிறதென்பதும், (9) கம்பரை எறும்பிற்கு ஒப்பிட்டது முற்றிலும் பொருந்தி அவரை உயர்வுபடுத்துகிறதென்பதும், (10) நமது தமிழாரியப் புலவர் கம்பரோடு இகலி வால்மீகத்தையேனும் சரி ஆரிய மறையையேனுஞ் சரியே தமிழென்ற போலிப் பெயரிட்டு, "கம்பனை இழிவாய்க் கூறிய துண்மையா"

என்ற தலைப்பெயரிட்டு எழுதியது போன்ற ஓர் கலவை மொழியில் செய்யுளியற்றுவரேல் அக்கலவை மொழி மேற்சொன்ன தமிழ்ப் பொலிவுகளைப் பெறவியலாவென்பதும், (11) அவ்வாறு இவர் கொடுக்கும் நூல் தமிழைக் கெடுக்கும் கருவிகள் இதுவரை யிருக்கின்றனவற்றுள் இன்னுங்கூரிய ஓர் கருவியாய்ச் சேருமென்பதும், (12) இவர் செந்தமிழ் நன்றாக வெழுதும் ஆற்றல் வாய்ந்திருக்கின்றாராயினும் தன் தாய்மொழியிடத்து நன்றியுணரா இயல்பால் வழுக்குகின்றன ரென்பதும், (13) இன்னும் மற்றைய தமிழந்தணர்களும் இத்தகைய பழிக்கு ஆளாகியிருக்கிறார்களென்பதும், (14) இல்லாட்சி வேண்டும், தனியாட்சி வேண்டும் என்று கதறுவதற்குமுன் தங்கள் இல்லத்து மொழியை ஓரமின்றி, நன்றியறிதலோடு, பேச்சிலும் எழுத்திலும் கல்லூரிகளிலும் தூய தன்மையில் நிலைநாட்ட முயலவேண்டுவது அவர்கள் கடமை என்பதும், (15) ஆரியம் உட்பட ஒவ்வொரு மொழிக்கும் சிற்சில சிறப்புத்தன்மைகளில் ஏற்றமிருப்பது உண்மையாகையால் வால்மீகத்திற்கு தனியாகச் சிறப்புச் சொல்லுவது முறையேயன்றி கம்பர் தமிழை இழித்துக்கூறுவது முறைமையன்றென்பதுமே.

இப்போதைய கல்விமுறையில் நம்நாட்டுமொழிகள் புறக்கணிக்கப்படுவதனால் நாட்டுக்குடிகள் தமிழ்ப் பயில்வது பெரும்பாலும் புதினத்தாள்கள் வழியாகவே. அதனால் புதினத்தாள் வழங்குவோர் செந்தமிழைக் கூடியமட்டில் படிப்போர்க்குப் படைக்கவேண்டுவது கடவுட்குப் படிந்த கடமை. செந்தமிழெழுதும் வன்மையில்லார் எத்தமிழெழுதினும் நாம் வருந்தவொழுங்கில்லை. நம் தமிழாரியப் புலவர் போன்றவர்கள் கலவை மொழி யெழுதுவதற்குக் கடவுள் மன்னிக்கமாட்டார். ஆகலின் அவர் வணங்கும் கடவுளாணை இனியெழுதும் எழுத்து உரை நடையாயினும் சரி செய்யுளாயினும் சரி செந்தமிழிலேயே எழுதுவாராக. யான் எழுதிய இத்தனை நீண்ட தாள்களும் செந்தமிழிடத்து ஊக்கம் தமிழ் கற்குமெல்லோருக்கும் பிறக்கவேண்டுமென்பதற்கே. செந்தமிழில் நமது தமிழாரியப்

புலவர் எழுத வாரம்பிப்பாராஞல் கம்பனை கம்பர் என்று சொல்லவேண்டுமென்று உணர்வர். அடுத்தாப்போல் கம்பனைக் கம்பரவர்கள், திருக்கம்பரவர்கள் என்றும் சொல்வது தகுமென நமக்கு வற்புறுத்தப் புகுவர்.

யான் இவ்வாறு பன்னிப்பன்னி ஏட்டடாக எழுதியதினியும் நீண்டதோர் மறுப்புரையை வெற்றிலேபாக்கு வைத்து அழைக்கிறேனென்பதை மறந்தேனல்லேன். ஆனுல் அதனைச் செந்தமிழில் வரவேற்கவே விரும்புகின்றேன். அத்தகைய செந்தமிழில் என்னை எவ்வளவு இழித்துக் கூறியிருப்பினும் அதிலுள்ள தூயதமிழுக்காக அதனைக் கண்களி லொற்றிக்கொள்ளவே செய்வேன்.

தமிழ்த் தாய்க்குக் கடமை பூண்ட தமிழ் மகன்.

முற்றிற்று.

---

குறிப்பு:—இக்கட்டுரை 1919ஞு ஜனவரிமீ வெளிவந்த ‘பெண் கல்வி’ என்னும் புதினத்தாள் தொகுதி 8, பகுதி 1-ல் ‘கம்பனை இழிவாய்க் கூறியதுண்மையா?’ என்று எழுதியதை ஆராய்ந்து 12-1-1919-ல் எழுதப்பட்டு அனுப்புவதன் முன்னரே அப் புதினத்தாள் நின்றுவிட்டமையால் இப்போது இதில் வெளிவர நேர்ந்தது.

# காழித்தேவாரச் சிறப்பு

(முதற் பால் சஙிஉ ஆம் பக்கத் தொடர்ச்சி)

இந்தப் பண்களுள், தற்காலத்து முதல் திருமுறையில் நட்டபாடை முதல் 7 பண்ணும், இரண்டாந் திருமுறையில் இந்தளம் முதல் 6 பண்ணும், மூன்றாந் திருமுறையில் காந்தார பஞ்சமம் முதல் 8 பண்ணும் ஆக 21 பண்ணும்,

நான்காந் திருமுறையில் கொல்லிமுதல் 10 பண்ணும், ஐந் தாந் திருமுறையில் குறுந்தொகையும், ஆறாந்திருமுறையில் தாண்டகமும் ஆகப்பண் 10ம் பா 2ம், ஏழாந் திருமுறையில் இந்தளம் முதல் 17 பண்ணும், ஆக 48 பண்ணும் உள்ளன. இந்த இருபத்தொரு பண்கள் நரப்படைவுள்ள மங்கலப் பண்களாக வாரப்பாடலில் வருவன. அதுபற்றி ஞானசம்பந்தர் ஆதியிலே இந்தப்பண் இருபத்தொன்றிலும் தமது தேவாரத்தைப்பாடி யருளினர்.

"எஞ்சத்தேய் வின்றிக்கே யிமைத்திசைத்த மைத்தகொண்
டேழேயேழ நாலேமூன் றியலிசை யிசையியல்பா
வஞ்சத்தேய் வின்றிக்கே மனங்கொளப் பயிற்றுவோர்
மார்பேசேர்வாள் வானோர்சீர் மதிநுதன்மடவரலே.

என்ற திருப்பாட்டைக் கவனிக்க. நான்காந் திருமுறையில் காந்தாரம் இரட்டித்துவருவது பாலையாழ்த்திறம் பற்றியும் என்க. திருமுறைகண்ட புராணத்தில் இரண்டாந் திருமுறையில் காந்தாரமும், மூன்றாம்திருமுறையில் கொல்லிக் கௌவாணமும் குறிப்பாகக்கூறியது, யாழ்த்திறம் பற்றியேயாம். இனிப் பண்களுக்குக் கட்டளைவகை திருமுறைகண்ட புராணத்தில் சொல்லப்பட் டிருக்கிறது. (35—43) இப்புராணிகருடைய கவிகள் சொற் சுருங்கிப்பொருள் ஆழமுடையன. ஆதலின் தேவாரம் பெரியபுராணம் ஆகிய இரு நூல்களையும் செவ்வனம் ஆராய்ந்து, அவற்றிற்கு மாறுபடாமல் பொருள் கொள்ளுதலே தக்கது. இதனுள் தாண்டகமாம்பா என்றும், குறுந்தொகை

என்றும், பாவினத்தால் பெயர் கொடுத்தார். மற்றையவற்றிற்குப் பண்ணால் பெயர் கொடுத்தார். நேரிசையாங் கொல்லிக்கு என்று அப்பண்ணுக்கு நான்காந் திருமுறையில் திருநேரிசை திருவிருத்தம் என்னும் இரண்டு பாவிகற்பங்கூறி, ஐந்தாந் திருமுறையில் ஓர் பாவிகற்பமும், ஆறாந் திருமுறையில் மற்றோர் பாவிகற்பமுங் கூறினார். இனிக் கட்டளைகளை உணர்த்தவரும் போது, நட்டபாடைக்குத் தொகை எட்டுக்கட்டளை, தக்கராகம் ஏழுகட்டளை என நேர்நேரே செம்மையாகப் பொருள் கொள்வதும் அன்றி, 37ல் 'காந்தாரமாகிய பியந்தையாங் கட்டளைக்கு வாய்ந்தவகை மூன்றாக்கி' என்ற இடத்துக் காந்தாரம் கட்டளை மூன்று, பியந்தைக் காந்தாரம் கட்டளை மூன்று என்றும், 38ல் 'சொல்லும் இசை' என்றது பழம் பஞ்சுரம், அதற்குக் கட்டளை ஒன்று என்றும், 41ல் 'கொல்லிக்கு வேறுவகை மூன்றாக' என்ற இடத்துக் கொல்லி மூன்றுகட்டளை, கொல்லிக்கௌவாணம் மூன்றுகட்டளை என்றும், 'காந்தாரம் பிரித்து இரண்டாம்' என்ற இடத்து, காந்தாரம் இரண்டுகட்டளை, பியந்தைக் காந்தாரம் இரண்டுகட்டளை என்றும், பெரியோர் பொருள் கொள்வார். இக்கட்டளைப் பாகுபாடுகள், சீர்தொண்டைப்பற்றி வந்தன என்பதை இயற் புலவர்மாட்டும், சுருதி, சுரம், கீதம், வர்னம், கிராமம், சாதி, ராகம், தாளம் பற்றி வந்தன என்பதை இசைப் புலவர்மாட்டும் கேட்டுணர்க.

இக்காலத்து வழங்கும் ராக தாளங்களும், பூர்வகாலத்து வழங்கிவந்த பண், கட்டளைகளுக்கும், ஒற்றுமை வேற்றுமைகளைக் காண்பது, அசாத்தியம். இக்காலத்து ஏழு சுரங்களும், இருபத்து இரண்டு சுருதிகளும், எழுபத்திரண்டு கர்த்தாக்களும், அவற்றின் வழி ஜன்னியராகங்கள் 484ம், அப்பலராகங்களிலிருந்து பெருவழக்குப் பற்றி எடுத்துக்கொண்ட 32 ராகங்களும், சச்சற்புடம் முதலிய பஞ்சதாளங்களும், சதுச்ரம் த்ரிச்ரம் மிச்ரம், கண்டம், சங்கீர்ணம் என்னும் ஐந்து தாள ஜாதியும், துருவம் மட்டியம் முதலிய சப்த தாளங்களும், அரிதாளம் முதலிய நவசந்திகளும், காலம் மார்க்கம் முதலிய தசப்

பிரமாணங்களும் வழங்கிவருகின்றன. பூர்வகாலத்துப் பண்ணை யும் தற்காலத்து இராகங்களையும் வெகு நுட்பமாய் அறிதல் வேண்டும். எவ்வாறெனில் ஆயப்பாலையில்வரும் பன்னிரு சுரங் களுள், முதல் இரண்டு சுரங்களும், பெரும் பாலையில் ஒன்று; அவற்றுள் முந்தியது, 24 ச 4, 4 ரி. 8–4 க. 10–2 ம. 14 ப. 18–4 த. 22–4 நி. இவற்றில் நின்ற நரம்பு 40, 2 நரம்பு, 2. நட்பு நரம்பு, 4. கிளை நரம்பு, 5. இணை நரம்பு, 7. இரண்டு நரம்பு, 9. நட்பு நரம்பு, 11 வருவதனை, தற்கால முறைப்படி 29 வது மேளகர்த்தாவில் தீரசங்கராபரணம், ச. 4 ரி. 4 க. 2 ம. ப. 4 த. 4 நி. ச. அதாவது இன்னும் தெளிவாய்ச் சொன்னால் ஷட்ஜமம், சதுச்ருதி ரிஷபம், அந்தர காந்தாரம், சுத்த மத்திமம், பஞ்ச மம், சதுச்ருதிதைவதம், காகலி நிஷாதம் வருதலை நோக்கி ஒற்றுமை காண்க. இவ்வாறே பிறவற்றையும் சங்கீத வித்வான் கள் ஒப்புமைகாணல் வேண்டும். கல்லிடக்குறிச்சி சுப்பிர மணிய தேசிகரும், மகா வைத்தியநாத ஐயரும், இராமசாமி ஐயரும், சாலிவாடீஸ்வர ஓதுவாரும், தாண்டவராயத் தம்பிரா னும், புராணிகர் சண்முகம் பிள்ளையும் இன்னபண்களை இன்ன இராகத்தில் பாடவேண்டும் என்று ஒரு அட்டவணை குறித் திருக்கிறார்கள். அதில் ஸ்ரீ புகலி திருவீழிமிழலை, பண்நட்ட பாடை, மைம்மரு என்ற பதிகத்தை, திச்ரதாளம் சகானாவிலும்; திருப்பிரமபுரம் சக்கரமாற்று, காந்தாரம், பிரமனூர் என்ற பதிகத்தை, ஆதிதாளம் சாவேரியிலும்; திருயமகம், காந்தாரம், உற்றுமை என்ற பதிகத்தை, திச்ரம் சங்கராபரணத்திலும் பாடவேண்டும் என்றும், நட்டபாடைப் பண்ணில் வரும் செங் காட்டங்குடிப் பதிகத்தை ஆனந்த பைரவியிலும்; புகலூர்ப் பதிகத்தையும் வீழிமிழலைப் பதிகத்தையும்; நாட்டைக் குறிஞ்சி யிலும், நள்ளாற்றுப் பதிகத்தைச் சங்கராபரணத்திலும் பாட வேண்டுமென்றும்; நட்டபாடையில் வரும் இரண்டொரு பதி கங்களை இந்தளப் பண்ணில் வரும் 'பித்தா பிறைசூடி' போலப் பாடல் வேண்டுமென்றும் கண்டிருக்கிறது.

சைவத்திருமுறை பன்னிரண்டனுள் முதல் ஏழுதிருமுறை களாக வகுக்கப்பட்டுள்ள தேவாரங்களை அருளிச்செய்த பெரி

யோர்கள் யாவர்? இவைகளைப் பட்டினத்துச் சுவாமிகள், "வித்தகப்பாடல் முத்திறத்தடிகள்" என்கிறார். நம்பியாண்டார் நம்பிகள் திருத்தொண்டர் திருவந்தாதி, திருஞான சம்பந்தர் திருவந்தாதி, திருச்சண்பை விருத்தம், திருமும்மணிக் கோவை, திருவுலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகை, திருநாவுக்கரசர் திரு ஏகாதசமாலை முதலிய பிரபந்தங்களில் இவர்கள் பெருமையைக் கூறுகின்றார். உத்தமசோழன் ராஜராஜன் அநபாயன் முதலிய சோழவரசர் பல சிவாலயங்களில் இவர்களைப் பிரதிட்டைசெய்து, நிபந்தம் ஏற்படுத்தி, நித்திய நைமித்திக விசேஷபூஜையும், திருவிழாவும், நடத்திச் சிவாலயங்களில் தேவாரத் திருமுறைகளை ஓதிவரப் பல ஏற்பாடுகளையும் செய்து வந்தார்கள். இவை அவ்வரசர்கால சாசனங்களால் நன்கு புலப்படும். அவர்களை அநுசரித்து, நாமும் நற்பேறு பெறவேண்டுமெனக்கருதி அப்பூசையும் விழாவும் இற்றைவரை நடத்திவருகின்றோம், இனியும் நடத்திவருவோம். நமது நாட்டில் மடாலயங்களிலும் தேவாலயங்களிலும் வீடுகளிலும் இல்லறத்திலும் வித்தியாலயங்களிலும் இவர்களது திருவுருவப் பிரதிஷ்டையும், இவர்களைத் துதித்துச்செய்யும் புராணபடனமும், மகேஸ்வர பூஜையும், குருபூஜையும், திருமுறையன்பர் திருக்கூட்டமும், பக்தஜனசபையும், தேவாரபடனமும், மிகுத்துள்ளன. இவற்றிற்குக் காரணம், நம்முன்னோரும், நாமும் செய்த பெருந்தவத்தால், குன்றத்தூரில் திரு அவதாரஞ்செய்து, தொண்டர் சீர் பரவும் சேக்கிழார் முனிவர்பிரபாவமே. அம்முனிபுங்கவர் திருவாய்மலர்ந்தருளிய பெரிய புராணத்தில் இம்முத்திறத்தடியவர்கள், பெருமை விளக்கமாகக் கூறியிருத்தலின், அவற்றை நாம் கேட்டுணர்ந் திருக்கின்றோம். அப்பெரியாராவார், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார் என்பார். இவர்கள் சங்ககாலத்திற்குப் பின் ராஜ ராஜனுக்குமுன் இருந்தவர்கள். சில பெரியோர் இன்னுந்திட்டமாகச் சம்பந்தரும், அப்பரும் ஏழாம் நூற்றாண்டின் இடைக்காலத்திலும், சுந்தரர் ஒன்பதாம் நூற்றாண்டின் முதற் பகுதியிலும் இருந்தனர் என்று கூறுவர். இவர்களது பெரு

மையைச் சங்கிரகமாக, தொண்டர் புராணசாரம், 32, 33, 24, 25, 2, 3 திருவிருத்தங்களால் அறியலாம். இவ்விருடிகளுள், சம்பந்தர், அடங்கன் முறையில் முதல் மூன்று திருமுறைகளை யும், அப்பர் இடை மூன்று திருமுறைகளையும், சுந்தரர் கடை யொரு திருமுறையையும் வெளிப்படுத்தினர். இத்திருமுறைக ளில் அடங்கிய திருப்பதிகங்கள் எத்துணை? திருப்பதிகம் ஒன் றுக்குப் பத்து, பதினொன்று, பன்னிரண்டு திருப்பாசுரம் உண்டு; அவ்வகைத்திருப்பதிகங்கள், பல சேர்ந்தவை திருமுறை; நம்பி யாண்டார் நம்பிகள், திருத்தொகையில் 'பதினாறுயிரம் பாவித் துப்பொருளை விளக்கவல்லான்' என்றும், திருவுலாமாலையில் 'பன்னுதமிழ்ப் பதினாறுயிர நற்பனுவல், மன்னுபுவியவர்க்கு வாய்ப்பவு, முன்னியசிந்தையாற் சீரான் கவுணியர்க்கோர்சேய்' என்றும், சம்பந்தர் திருவந்தாதி 'பதினாறுயிரம் பதிகம் வாய் மொழிந்த காழிப்பிரான்' என்றும், சம்பந்தரைக் கூறுவதால், அன்னோர்பதிகம் பாடல் பதினாறுயிரம் ஆதல்காண்க. திரு முறைவகுத்த பெருமான் திருவேகாதசமாலையில், 'பதிகமே ழேழெழுநூறு பகருமாகவியோகி' என்றும், 'கசிந்து எழுவோ டெழுநூறரும் பதிகநிதி' என்றும், சுந்தரர்நின்றியூர்ப்பதிகம், 'அணிகொள்' என்னும் பாசுரத்தில் 'ஏழெழுநூறிரும் பனுவல் ஈன்றவன் திருநாவுக்கரையன்' என்றும், சேக்கிழார் ஏயர்கோன் கலிக்காமர்புராணத்தில் 'ஏழெழுநூறுதிருப்பதிகம் அருள் செய்தார்' என்றும் அப்பரைக் கூறுவதால், அன்னோர்பதிகம் பாடல் 49000 ஆதல்காண்க. மேற்காட்டிய பிரமாணங்களில் பா, பனுவல், பதிகம் என்னும் 3 பதங்களும் பதிகமென்னும் ஒரேபொருள்பட நிற்கின்றன. சம்பந்தர் அருளிய 'வாழ்க அந்தணர்' என்ற பதிகம் திருப்பாசுரம் என்றும், அத் திருப்பாசுரத்தில் ஒவ்வொருபாடலும் பாசுரம் என்றும் கூறப் படுகின்றன.

(தொடரும்)

P. A. முத்துத்தாண்டவராய பிள்ளை,

சீர்காழி.

# தமிழர்தம் உயிர்க்குறுதி

இக்காலத்தே தமிழர்களின் மேனிலைப் பொருளும் வடவாரியர்களின் உயர்நிலைப் பொருளும் ஒன்றே யென்றெண்ணுமாறு பல்லாண்டுகளாக வேதங்கள், புராணங்கள் இருதிறத்தினருக்கும் பொதுவாகி வழக்கில் வந்துள்ளமையால் பிரித்தறியக்கூடாத நிலைமை யேற்பட்டிருக்கிறது. தோண்டுதல் செய்தபோது மணற் கேணியினின்றும் நீரைக்காணுவது போன்று தமிழர்தம் மிகப்பழைய வாழ்க்கையையும் அவ்வாழ்வில் தங்கள் உயிர்க்குத் தாங்கள் தேடிவந்த உறுதிப் பொருள்களின் அடைவையும் அவற்றினால் அவர்கள் அடைந்த அமைவும் ஆறுதலும் பேரின்பமும் தமிழர்களின் மொழிக்குரிய வரிவடிவாலும், அவர்களின் முதன் முதல் கண்டு அறியப்பட்ட சில ஆதாரங்களாலும் ஆராயப்புகின் தெளிவாம். தமிழின் சிறப்பையும் அதன் தோற்றத்தையும் பற்றி ஆய்ந்தறிவிக்கின்ற ஒரு சில பத்திரிகைகள் நூல்கள் முதலியவற்றால் தமிழ் நாடே முதன் முதல் உயிர் படைப்பையுற்ற தென்றும் அத்தமிழகமே முதன் முதல் மொழியமைப்பையும் அதன் வளர்ச்சியையும் அடைந்த தென்றும் பல ஆதாரங்களால் துணியப்படுகின்றன. அத்தமிழக மாந்தர் தங்கள் வாழ்வின் ஏற்றத்தை நாளடைவில் அடைந்தது போலவே அடையவேண்டிய மறுமைப் பேற்றைப்பற்றியும் நாடிநாடிப் பல துணிவுடையராயிருந்து ஈற்றில் மேலாயதோர் உறுதி யிதுவென்று பலகாலங்கட்கப்பால் முடிவுக்கு வந்தன ரென்றும் அறியக்கிடக்கின்றது.

தொடக்கத்தில் தமிழர் தங்கள் மதவுண்மையைத் தங்களுக்குப் புறம்பாகவிருந்த சில பொருள்களின் வடிவமாகக் கருதி யப்பொருள்களைப் பூசிக்கலாயினர். அப்படிப் பூசித்தொருமுகப்பட்ட மன நிலையால் உள் நாட்ட நிலையைப் படிப்படியாய் அடைந்து அவ்வாற்றலால் எண்ணியாங்கு இயற்றும் சிற்சில இருத்தி கலைகளை யெய்தப் பெற்றனர். அப்பயிற்சியினும் நிலைபெற்று மெய்ப்பொருளை யறிந்துணரு முறையில்

இழிந்து கண்டதோர் இன்பப் பேற்றை மெய்ப்பொருளெனவும் அதை யுலகுக் கறிவிப்பான் வேண்டி அதற்குப் பற்பல தத்துவக் குழாங்களைத் தம்மறிவினால் புனைந்து சமயமெனவும் பொது மக்கட்குப் புகட்டினர். தாங்கள் முதலில் வழிபட்ட குறிகளையும் நடைகளையும் உடனாகக்கொண்டு தாங்கள் முடிவில் கண்டறிந்த மெய்யின்பப் பொருளடைவுக்கு இது வழி, இவ்வழி நின்றொழுகுவார் இன்ன சமயத்தினர் என்று அறிவித்து வந்தவராகவேண்டும்.

தமிழர்களில் உயிர்க்குறுதி நாட்டத்தில் முயன்ற பெரியோர்கள் தம் முயற்சியிற் பிற்பட்ட மக்களுக்கு வழிபடுவதற்காகத் தங்கள் உறுதிப் பொருளைக் குறிப்பாகக் குறிக்கிற சில குறிவடிவங்களை யமைவித்துக் கோயில்கட்டி வழிபடு நெறி யிதுவென்று அறிவித்துத் தம் நாட்களை உலகுக்குத் துணை நிற்கும் பெரு நிலையில் கழித்துச் சென்றனர். பேதையருக்குப் பெரும் பொருளுரைத்து விளக்கற் காகாதென்றறிந்த அவ்வறிஞர் தாமமைத்த கோயிற் குறிகளின் வரலாறொன்றை மெய்ப்பொருளுட்ட நெறிக்குச் சிறிதும் புறம் போகாத மறைபொருளுடையதாகப் புனைந்து பல சரித்திரங்களைக்கூறி வந்திருக்கின்றனர். இவ்வகையில் தமிழ்நாடு முன்னேற்ற மடைந்தெதாளிருங்கால் ஆரியராணுகித் தாமமைத்து வைத்திருந்த வேதங்களில் தமிழ்ப் பெரியார்களின் உறுதிப் பொருளைக் கேட்டறிந்து தாங்கள் சில புனைவுகளுடன் கூட்டி முடிவுகளாகச் சேர்த்தும், தமிழர் கூறும் வரலாறுகளைச் செவிவழி மாந்திப் பின்னும் பிற புனைவுகளைக் கூட்டிப் புராணங்களெனவும், முற்பட்டவற்றை உப நிடதங்களெனவும் வழங்கிவந்தனர். இது மிகப்பழைய காலத்தே நிகழ்ந்தமையானும், எண்ணில் காலம் கழிந்தமையானும், தமிழ்ப் பெரியார் தங்கள் சமய நெறிகளை யேட்டில் வரையாது ஒழுக்கத்திலேயே அமைய விட்டிருந்ததோடு அமைந்திருந்து விட்டமையானும் பின் வந்த தமிழர் ஆரியரிடமிருந்து அருமறைப் பொருள்களையும் புனைவுரை வரலாறுகளையும் வாய் பொத்திக் கேட்டுணர வேண்டியதாயிற்று. இக்கூற்றுகட்குப் போதிய ஆதாரங்கள் விரிந்து கிடக்கக் கிடப்பின்று. சிற்சில

குறிப்புக்களைக்கொண்டு ஆய்ந்து செல்லுங்கால் மேற் கூறிய அடைவு தோற்றமாம். எவரும் முதன் முதல் வணங்கும் முற் பொருள்களாகக் கொள்ளக்கிடப்பன பூதங்கள், கோள்கள் அறி விற் சிறந்தார் ஆற்றலிற் பெரியார் இவர்களின் வடிவச்சிலைகள் ஆயவாம்.

உலகக் காட்சிக்கு அப்பாற்பட்ட மனநிலையை யடைந்த வர்கள் ஒலிமுழக்கம் தம் உடம்பகத்தே யுண்டாகவறிந்த மன வெற்றியாளர் அவ்வொலியை ஓங்காரம் என்றும் அது மறை மொழிகட்கு மூலமென்றும் சிறக்கச்சொல்லி யிருக்கின்றனர். அதை வரிவடிவில் ஒகாரத்தை வரைந்து இறுதியில் சற்று விகற் பித்து எழுதியது பிரணவம் என்றருளியுள்ளார். அந்தப் பிர ணவ வடிவமே விநாயக மூர்த்தம் என்று துதிக்கையோடு கூடிய யானையின் தலை தோற்ற ஒற்றுமையாகக் கூறுகின்றனர். மக்களது தலையும் ஒகார எழுத்தின் மேல் வரியோடு வடிவில் ஒப்புமை யிருப்பதால் மக்களது வடிவம் பிரணவ சொரூபம் என்ற னர். இதை யொட்டி மக்கள் உடலில் ஆறு நிலைக்களங்களையும் யந்திரங்களையும் அவற்றுள்ளே மூர்த்தங்களையும் கற்பித்து அவை ஆறுதாரங்களெனவும் அவற்றிடை மனம் நிலைபெறச் செய்து மனவொருமைப் பழக்கத்தால் மேனிலை யடையும் நெறி யோகம் என்றும் அருளினர். இப்பயிற்சியால் இருத்தி கலைகளாய சித்திகள் வாய்க்கப்பெறுவதாக அறியக் கிடக்கின்றன. இந்த ஒகார வரிவடிவை யொட்டியே சிவலிங்கக் குறிவடிவம் கோவில் களில் பெரியார்களால் நிறுவப்பட்டன வாகலாம். இக்குறியே கடவுள் என்ற உயர்நிலைப் பெரும்பொருளைச் சுட்டிக் காட்டு தற்குக் குறிப்பாகப் பழம்பெரியார் மக்களிடத்து அருளுண் டாகி நாட்டினர். சிவலிங்கம், கந்தழி, கடவுள் என்னும் சொற் களும் பொருள்களும் ஆயப்பட்ட காலத்தே உலகப் பொரு ளாட்டத்தைக் கடந்து நிற்கின்ற மனவமைதியுற்ற ஒலி முழக்கு உணரப்படுகிற நெறிவழியா யதற்கப்பாலான செயலற்ற ஓர் உள்நாட்ட உணர்வு நிலையையே பொருள் படுத்துகின்றன. இந்த ஒலிநிலையின் மேலதாய் விளங்கும் பரமபதி நிலையைச் சுட்டுதற்கு மொழியின் எழுத்து வடிவமும், ஒலியும், சொற்

களும் தொன்று தொட்டுண்டாயிருப்பது கொண்டு யோக நெறியின் முடிவாய வீட்டுநிலையை உறுதிப் பொருளாகத் தமிழர் அடைந்திருந்தனர் என்னற்கு ஐயமின்று. உயிரானது யோக நெறியால் உயர் நிலையடையும் சீரிய பெற்றியையே தமிழர் தங்கள் உயிர்க்கு உறுதிப் பொருளாகக் கொண்டிருந்தனர் என்பது பெறப்படும். இதைத் தமிழர்தம் மிகப்பழைய நூல்களும் மதநூல்களும் ஆங்காங்கு ஏற்றுப் புலப் படுத்துகின்றன. இவ்வரிய பெரிய நிலையைத் தங்கள் மறை பொருளாகக் கொண்டவர்கள் தமிழர். ஆகலின், தமிழர்க்கு ஒழுக்கத்திலமைந்த மறையே முதன் முதல் தோன்றியது. அதுவே பிற்பட்ட பிறவற்றிற்குத் துணையாகி யிருக்கலாம். அல்லையேல், எவரும் தத்தம் அறிவின் முதிர்ச்சிக் கேற்ப ஒருவ ரடைந்த உண்மைப் பேற்றையே கால முதிர்ச்சியில் அடையக் கூடுமாதலின் அங்ஙனம் அடைதற்கும் பிறருக்கும் தமிழர்க்கும் அறிவின் உயர் நிலையில் ஒப்புமை யிருத்தற்கும் இடமுண்டாம். ஒரு நாட்டின் ஓர் கோடியில் ஒரு திறத்தார் முன்னேற்ற மடைந் திருப்பாராயின் அதே நாட்டின் மற்றோர் கோடியில் முன் னேற்ற மடையாத பிற்பட்ட காலத்தவர்கள் முற்பட்டவர்களின் அறிவு நடை முதலியவற்றை யொட்டி நடந்து அந்நடையைத் தமதாக்கிக் கொள்ளக்கூடுமாதலால் தென்மொழியாளரே பிற மொழியாளருக்கு அறிவில் துணைநின்று கைதூக்கினவராக வேண்டும்.

இத்தகைய தமிழர் தம் முன்னோர் ஒழுக்கத்தை விட் டுப் பிறரிடமிருந்து இரந்துவாங்கும் ஆதுலராகியும் அன் றைக் கிருந்ததினும் நாளடைவில் அறிவின் ஆராய்ச்சியினுதவி யால் சிறந்ததோர் அறிவொழுக்க வளர்ச்சியையடைய முன் வராமல் செய்ததையே செய்தும் ஊக்கமின்றியும் செய்ததையே செய்யும் வழிபாட்டில் வெறுப்புற்றும் மேனிலைநாட்டத்தை ஏட்டளவேயாக்கி நடைதளர்ந்து பிற்பட்டுப் பிறருக்குச் சிறப் பாகக் காணப்படாது ஒளி மழுங்குகின்றனர். ஆதலின் தளர்வு தீர உயிர்க்குறுதியாம் ‘உணர்வு சூழ் கடந்ததோர் உணர்வு’ நிலையின் வழிதேடிச் சிறப்பாராக. S. K. S. ஆநந்தன்.

# ஞானப் பூங்காவனம்

ஒரு நாள் காலைப் பொழுதில் எளியேன் தூய நீரிற் றோய்ந்து, வெண்டுகில் பூண்டு, தூநீறணிந்துகொண்டு, அம்மையப்பராக இலங்கும் நமது அருட்கடலாகிய சிவபரம்பொருளை அருச்சிக்க, அன்பெனுமலர் கொய்வான், நமது தேவாரத் திருஞானப் பூங்காவனத்தை நண்ணினேன். நமது நடராஜ வள்ளலார் திருநடம் புரியும் திருக்கோயிலே அதன் வாயிலாகப் பொலிந்து கொண்டிருந்தது. அப்பொற் கோபுரத்துட் புகுந்தேன். எங்கும் சிவமணம் செறிந்திருந்தது. திருநான்மறையும் தெய்வாகமங்களுமாய பச்சைப் பசுங்கொடிகளும் செடிகளும் என் கண்களைக்கவராநின்றன. அவைகளில் தருமம் எனுந் தளிர்கள் மிளிர்ந்து கொண்டிருந்தன. அத்தளிர்களினிடையே அறவுரைகளும் மறைமொழிகளுமாகிய பூங்கொத்துக்கள் பொலிந்து கொண்டிருந்தன. அக்கொத்துக்களில் அழகிய அன்பு மலர்கள் அலர்ந்திருந்தன. அம்மலர்கள் ஞான ஒளியை வீசிக்கொண்டிருந்தன. அவைகளில் அருள்மணம் கமழ்ந்து கொண்டிருந்தது. சிவானந்தத் தேன் விளைந்துகொண்டிருந்தது. அச்செடி கொடிகட்கு அணித்தாக, அழகிய மரங்கள்பல அணி அணியாகத் தாங்கவியலாத தலையுடையனவாய்த் தழைத்து நின்றன. குளிர்ச்சிபொருந்திய கொத்துக்களையுடைய கொன்றை மரங்கள் சிவ பஞ்சாக்ஷரமெனச்சிறந்து இலங்கும் ஐந்து அழகிய இதழ்களையும், ஓங்கார வடிவமாக உயர்ந்து வளைந்த கம்பிகளையும் உடைய பொன்மலர்களை உதிர்த்துக் கொண்டிருந்தன. வில்வமரங்கள் பல விளங்கிக் கொண்டிருந்தன. மற்றும் செண்பகம் பாதிரி முதலிய பல தருக்கள் நன்மலர்களை உகுத்துக் கொண்டிருந்தன. ஒருபால் வாழை மா பலா முதலியவைகளில் கனிகள் பழுத்து முதிர்ந்து சாற்றை வடித்துக்கொண்டிருந்தன. அவைகளுக்கப்பால் அழகிய சிற்றாறுகளும், உவகையூட்டும் தீஞ்சுவைத்தண்ணீரையுடைய ஓடைகளும் ஓடிக்கொண்டிருந்தன. அவ்வாறுகளில் ஏடு எதிரேறிச் செல்வதும், ஓடங்கள் தாமாக ஓடுவதும் அடியவர் அருட்டிறத்தை விளக்கிக்கொண்

டிருந்தன. அவ்வோடைகளின் பக்கலில் தாமரைகள் இனியமடல் களையுடையனவாக இலங்கிக்கொண் டிருந்தன. அவ்வாறுகளின் கரைகளில் ஓங்கி உயர்ந்த தெங்கினமரங்களும், கமுகமரங்களும் வரிசை வரிசையாகக் காணப்பட்டன. சிறிது தூரத்தில் பொற் குன்றங்கள் பல பொலிந்து நின்றன. அக்குன்றங்களினின்றும் அருவிகள் ஆங்காங்கு ஓடி வந்தன. இவ்வாறு வருணனைக்கு எட்டாத வண்ணம் இயற்கையின்பம் எங்கும் செறிந்திருந்தது. அந்நீரோடைகளின் பாங்கரில் சிவநேசமிக்க தவநேசர் பலர், திருநீறுங் கண்டிகையுந்தாங்கித் திருவைந்தெழுத்தை ஓதிக்கொண் டிருந்தார்கள். மற்றும அன்பிற்சிறந்த அடியவர் பலர் தெய்வ மணம் மணக்கும் அருட்பாக்களை ஓதிக்கொண்டிருந்தார்கள். அவைகளை உற்றுக் கேட்டுக்கொண்டிருந்த கிள்ளைகள் கீதமினிய குரலோடு திருப்பி இசைத்துக்கொண் டிருந்தன. அப்பொழி லிடைவாழ் சுந்தரத் தின்பக்குயில்களும் பூவைகளும் அப்பாடல் களை ஆனந்தமாகச் செவி மடுத்துக்கொண்டிருந்தன. இன்னி சை வண்டுகள் பல ஓங்கார ரீங்காரஞ் செய்து கொண்டிருந்தன. ஆகாயத்தில் ஒருபால் சூரியன் ஒளிர்ந்து கொண் டிருந்தான். மற்றொருபால் அவன் அருட்டோற்றத்தால் உண்டாகும் அழகிய வானவில் திகழ்ந்து கொண்டிருந்தது.

அச்சுந்தரச்சோலையில் அழகிய ஆவினங்கள் ஆங்காங்கு பசும்புல்லை மேய்ந்துகொண்டிருந்தன. ஒருபால் மானும் மரை யும் மகிழ்ந்து ஓடிக்கொண்டிருந்தன. மயிலினம் தங்கள் அழ கிற் சிறந்த தோகைகளை விரித்து ஆடிக்கொண் டிருந்தன. யானைக்குழாங்கள் வரிசை வரிசையாக வந்தன. புள்ளினம் ஆர்த்துக்கொண்டிருந்தன. பொழில் முழுவதும் எழில் திகழ் ந்து கொண்டிருந்தது. அப்பொழிலின் ஒருபுறத்தில் அன்ன மாடு மகன்றுறைப் பொய்கைகளும் திருக்கோயில்களும் காணப் பட்டன. ஆண்டு ஒருபால்வெள்விடைமேல் உமாதேவியாரோடு சிவபெருமான் வீற்றிருபபக்கண்டனன். ஒருபால் புள்ளிமயின் மேல் வள்ளிமணாளன் தோன்றினன். ஒருபால்விண்ணிற்கு மண் ணிற்கு நாதனாகிய விநாயகப்பெருமான் வேண்டுவோர் வேண்டுவ

வெல்லாம் ஈந்து கொண்டிருந்தார். ஆண்டு அருந்தவ முனி வரர் பலர் அருச்சித்துக்கொண்டிருந்தார்கள். ஒருபால் ஈயும் எறும்பும் ஏத்திக்கொண்டிருந்தன. சிலந்தியும் சிவவழிபாடு செய்து கொண்டிருந்தது. ஓணும் உயர்தவம் உஞற்றிக் கொண் டிருந்தது. பசுவினம் பக்திசெய்து கொணடிருந்தன. யானைக்குழாங்கள் தம் துதிக்கைகளில் மலரும் நீரும் கொணர் ந்து துதித்துக்கொண்டிருந்தன. ஒருபால் மாசில்வீணை முரன்று கொண்டிருந்தது. மணி முழவு அதிரா நின்றது. சங்கங்கள் ஆர்த்தன. சாமரைகள் பனித்தன. அடியவர் பலர், "ஹரஹர" வெனும் ஆராவமுத மொழிகளால் அருட்பெருந்தகையாரை ஏத்திக்கொண்டிருந்தனர். சேர சோழ பாண்டியராகிய முடி புனை வேந்தர்மூவரும் முடிதாழ்த்தி நின்றனர். இவ்வாறு அவ் வழகிய ஞானப்பூங்காவனம் முழுதும் பேரின்பமணமும் ஞான ஒளியுமா யிலங்கிக்கொண்டிருந்தன. ஒருபால், 'மனிதர்கா ளிங்கே வம்மென்று சொல்லுகேன், கனிதந்தாற் கனியுண்ண வும் வல்லிரே, புனிதன் பொற்கழ லீச னெனுங்கனி, இனிது சாலவும் ஏசற்ற வர்கட்கே.' என திருநாவுக்கரசடிகளும்,

'மத்தயானை யேறிமன்னர் சூழ வருவீர்காள், செத்தபோதி லாருமில்லைச் சிந்தையுள் வைம்மின்கள், வைத்தவுள்ள மாற்ற வேண்டா வம்மின் மனத்தீரே, அத்தர்கோயி லெதிர்கொள் பாடி யென்பதடைவோமே' எனச் சுந்தரமூர்த்திசுவாமிகளும் யாவரையும், "அன்பர்களே! வருக! வருக!! ஆராவின்ப அருங்கனியினைப் பருகுக! பருகுக!!" என்றழைப்பக்கண்டு, அன்னோர் அருட்டாளிணைகளில் வீழ்ந்துபணிந்து எழுந்தேன். பின்னர் அப்புட்பச்செடிகளை அடைந்தேன். அவைகளில் அழகு பெற அலர்ந்திருந்த அன்பு மலர்களை என் கண் மலரால்கொய்த னன். மனமெனும் பூங்கூடையில் மகிழ்சிறப்ப வைத்து மாதே வனை அருச்சித்து மகிழ்ந்தனன்.

அன்பர்களே! இத்தகைய சிவஞானப் பூங்காவனத்தை நண்ணிப் பேரின்பப்பெருவாழ்வுபெற முயலாது, ஏனோ உங்க

ளிற் பலர் சிறுமை இன்பத்தை நல்கும் தீய நாவல் காடுகளை நண்ணித் திசைதெரியாது அல்லற்படுதல் வேண்டும்? தீந்தமிழ்த் **தேவாரத் திருப்பாசுரங்களை** நீங்கள் ஓதுதலாகாதா? அவ்வருட் பாக்களால் ஆண்டவனை அருச்சிக்க முயலலாகாதா?

தேவாரம்—அர்ச்சனை.

வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமேயா ளென்னைக் கொண்டாய் போற்றி
யூற்றாகி யுள்ளே யொளித்தாய் போற்றி
யோவாத சத்தத் தொலியே போற்றி
யாற்றாகி யங்கே யமர்ந்தாய் போற்றி
யாறங்க நால்வேத மானாய் போற்றி
காற்றாகி யெங்குங் கலந்தாய் போற்றி.
கயிலை மலையானே போற்றி போற்றி.

பண்ணி னிசையாகி நின்றாய் போற்றி
பாவிப்பார் பாவ மறுப்பாய் போற்றி
எண்ணு மெழுத்துஞ் சொல்லானாய் போற்றி
என்சிந்தை நீங்கா விறைவா போற்றி
விண்ணு நிலனுந் தீயானாய் போற்றி
மேலவர்க்கு மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (அப்பர்)

பந்துசேர் விரலாள் பவளத்துவர் வாயினாள் பனிமாமதி போன் முகத்து, அந்தமில் புகழாண் மலைமாதோடு மாதிப் பிரான், வந்துசேர் விடம் வானவ ரெத்திசையுந் நிறைந்து வலஞ் செய்து மாமலர், புந்தி செய்திறைஞ்சிப் பொழி பூந்தாராய் போற்றுதுமே. (சம்பந்தர்)

ஊனமில்லா வடியார் தம்மனத்தேயுற ஞானமூர்த்தி நட்ட மாடி நவிலுமிடந், தேனும் வண்டு மதுவுண்டின் னிசை பாடியே, கானமஞ் ஞையுறையுந்தண் கழுக்குன்றமே. (சுந்தரர்)

அரு. சோமசுந்தரச் செட்டியார்,
காரைக்குடி.

# மணிவாசகனாரும் ஆழ்வார்களிற் சிலரும்

(முதற் சிலம்பு சருள-ஆம் பக்கத் தொடர்ச்சி.)

இங்ஙனம், யானைமலைக் கல்வெட்டானும் சென்னைப் பொருட் காட்சிச்சாலைச் செப்புப் பட்டயத்தானும் அறியக் கிடக்கும் பாண்டியர் இருவரும் இருவேறு காலங்களிலிருந்து அரசு புரிந்தருளிய வெவ்வேறரசர் பெருமக்க ளாதலைக் காட்ட முன்னோற்கு வேள்விக்குடி சாசனமும் பின்னோற்குச் சிறிய சின்னமனூர்ச் சாசனமுமே போதியசான்றா யிலங்குகின்றன. இவ்வுண்மை நன்றுணர்ந்து வேள்விக்குடி சாசனத்திற்கும் யானைமலைக் கல்வெட்டிற்கு முரியோன் எட்டாம் நூற்றாண்டி னிடை நின்ற நெடுஞ் சடையனும் சிறிய சின்னமனூர்ச் சாச னத்திற்கும் சென்னைப் பொருட் காட்சிச்சாலைச் செப்புப் பட்ட யத்திற்கு முரியோன் ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் நின்ற நெடுஞ் சடையனு மாவனெனக் காலங்காட்டி அரசாங்க சிலா சாசன பரிசோதகர்களான் வெளியிடப் பட்ட பாண்டிய வம்சா வளியும் எம்முரைப்பொருள் வாய்மை தேற்றி வலியுறுக்குமாறு காண்க.

மற்றும், இச் செப்புப் பட்டயத்தினை முதன் முதலாக Indian Antiquiry என்னு மாங்கிலப் பத்திரிகையின்கண் வெளிப்படுத்திய ஸ்ரீமான் வெங்கையா M. A. அவர்கள், யாமெடுத்துக்காட்டிய வாற்றானதனை விளக்கிலரேனும்,

'பொன்மலர் புரவில் வேள்ளூர் விண்ணஞ்
செழியக் குடியென் றிவற்றுட் டெவ்வர்
அழியக் கொடுஞ்சிலை அன்றுகால் வளைத்தும்
மாயிரும் பெரும்புனற் காவிரி வடகரை
ஆயிர வேலி அயிரூர் தன்னிலும்
புகழி யூரும் திகழ்வே லதியனை
ஓடுபுறங் கண்டவ னொலியுடை மணித்தேர்
ஆடல் வெம்மா அவையுடன் கவர்ந்தும்

வல்லவனும் கேரளனும் ஆங்கவற்குப் பாங்காகி
பல்படையொடு பார்ஞெளியப் பவ்வமெனப் பரந்தெழுந்து
குடபாலும் குணபாலு மணுகவந்து விட்டிருப்ப
வெல் படையோடு மேற் சென்றங்
கிருவரையு மிருபாலும் இடரெய்தப் படைவிடுத்துக் [போந்து
குடகோங்கத் தடன்மன்னனைக் கொல்களிற்றொடுங் கொண்டு
கொடியணிமணி நெடுமாடக்கூடன் மதிலாகத்து வைத்துக்
கங்கபூமி யதனளவும் கடிமுரசுதன் பெயரறையக்
கோங்கபூமி யடிப்படுத்துக் கொடுஞ்சிலைபூட் டிழிவித்துப்
பூஞ்சோலை யணிபுறவிற் காஞ்சிவாய்ப் பேரூர்புக்குத்
திருமாலுக் கமர்ந்துறையக்குன்ற மன்னதோர் கோயிலாக்கியும்.'

என்றவைபோன் றின்னு மச்செப்புப் பட்டயத்து வருமருஞ் செயலனைத்தும் ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியிற் செங்கோ லோச்சிய நெடுஞ் சடையற்கே உரிமை யுடைத்தாமாறு சரிதப் போக்கான் நன்றுணர்ந்து அச்சாசன எழுத்துக்களின் வடிவமைதிகொண்டு தெளியக் காட்டியதும் எமக்குறு சான்றா யிலங்குதல் காண்க.

இக்காட்டியவாற்றான், ஈண்டை யாராய்ச்சிக் கிலக்காய் நின்ற சிலாசாசனமும் செப்புப் பட்டயமும், காலத்தானும், ஆக்குவித்தோரானும், ஆக்கியோரானும் ஒன்றினொன்று மாறுபட்ட இருவேறு சாசனங்களா மென்பது இனிது விளக்கப் பட்டமையின்; மற்றிவற்றை ஒருவன் மேலாமாறு பிறழவுணர்ந்து ஸ்ரீமான், சீனிவாச பிள்ளை யவர்களும், அவர் தமக்கெடுத்துக் காட்டாய் நின்ற ஸ்ரீமத், மு. இராகவையங்கார் அவர்களும், ஸ்ரீமத் து. அ. கோபிநாத ராவ். M. A. அவர்களும் ஸ்ரீமத், வெங் கோபாராய ரவர்களும் செய்து போந்த கால நிருணயங்கள் மறுத் தொதுக்கப்பட்டன. இம் மறுப்பினான் எட்டாம் நூற் றாண்டிற் செங்கோ லோச்சிய இறைமகனான சைவ நெடுஞ் சடையனது யானைமலைக் கல்வெட்டின் வேறுபடுத்துக் காட்டிய சென்னைப் பொருட் காட்சிசாலைச் செப்புப் பட்டயத்திற் குரிய பரம வைணவ னெனப்படும் நெடுஞ் சடைய னென்பான்

ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் உலகு புரந்தருளினோனென்பது நிலை நாட்டப்பட்டது.

இந்நெடுஞ் சடைய னென்பான் ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் இருந்தோனாவ னென்பது நிறுவப் பட்டதனான் அவன் காலத்தவராக எண்ணப்பட்ட பெரியாழ்வார், அவன் றனக்கு முன்னோனென அப்பாண்டிய வம்சாவளியா னறிய வரும் வரகுண பாண்டியன் காலத்தவராக இஞ்ஞான்று சில ரால் கருதப்படுகின்ற மணிவாசகனார்க்கு, எவ்வாற்றானும் பின்னோரென்பது கூறாமேயமைந்து கிடப்பதொன்றாம். பல்லவ சரித்திரம் எழுதிய ஸ்ரீமான் சீனிவாசையங்கார் அவர்களும், மணிவாசகனாரைப் பெரியாழ்வார்க்கு முற்பட வைத்தோதுத லானே இதுகூறிக் கரிப்போக்கினாராதல் அந்நூலாற் கண்டு கொள்க.

பெரியாழ்வார் மணிவாசகனார்க்குப் பிற்பட்டவ ராமாறு காட்டிய வாற்றானே, அவர்தம் திருமகளாரான நாச்சியார் பிற்பட்டாராதல் அங்கை நெல்லிக்கனி யாமாறுணர்க.

இனி, பெரியாழ்வார்தம் திருமகளாரான நாச்சியார் அரு ளிய திருப்பாவை என்னும் பிரபந்தப் பெயரும் எமக்கினனாய் நின்று இவ்வாய்மை வெளிப்படுக்குமாறு காட்டுதும். ஒருதனிச் செய்யுட்காதல் அன்றி பல செய்யுட்களின் ஒரு தொகுதிக் காதல், அவற்றுட் பயின்றுவரும் ஒரு தொடரின் அருமை தெரித்தேனும், முதன்மை குறித்தேனும், அன்றி முடிவின் மகுடஞ் சுட்டியேனும் பெயர் தரக்கருதிய ஆசிரியர் ஆண் டத் தொடர் கிடக்குமாற்றான் எடுத்தமைத்தன் மரபாமென்பது, 'புண்ணுமிழ் குருதி, மறம்வீங்கு பல்புகழ், பூத்த நெய்தல், சான் றோர் மெய்ம்மறை நிரைய வெள்ளம்,' என்றற் றொடக்கத்துப் பதிற்றுப் பத்தானும் திருவண்டப் பகுதி, திருவெம்பாவை, திரு வம்மானை திருப்பொற் சுண்ணம், திருக்கோத் தும்பி என்றற் றொடக்கத்துத் திருவாசகத்தானும் திருப்பல்லாண்டு, வண்ண மாடங்கள், சீதக்கடல், மாணிக்கங்கட்டி, தன்முகத்து என்றற் றொடக்கத்துப் பெரியாழ்வார் திருமொழியானும் இன்னோரன்ன வேனை நூற்பகுதிகளானும் இனிது புலனாம்.

இம் முறையினுன் நாச்சியாரருளிய திருப்பாவை என்னும் பிரபந்தப் பாசுரமனைத்தும் எம்பாவாய் என்னும் ஈற்றின் நெறி பிறழாது யாண்டு மியன்றிருத்தல் நோக்கின், மற்றதற்குத் திருவெம்பாவை எனப் பெயரணிதலே மரபாமாகவும் அம்மர பின் மாறுகொண்டு திருப்பாவை என வங்ஙனம் சிதைத்துப் பெயர் நிறீஇயது, தமக்கு நெடு நாண் முற்படத்தோன்றி, தங்காலத்துத் தமிழ்நாடெங்கணும் மிகப் பிரபலமுற்றுத் தனிப் புகழெய்தி விளங்கும் மணிவாசகனாரது திருவெம்பாவையின் இயைபு நீக்கி வேறுபடுத்துக் காட்டவே என்பது தெள்ளிதா மாறு தெற்றெனத் தேர்ந்துகொள்க. மற்றிதனுன், மணிவா சகனாரருளிய திருவாசகத்தின் பிற்பட எழுந்ததே பெரியாழ் வார் தம் திருமொழி என்பதும் (மணிவாசகனாரது திருவெம் பாவையின் பிற்பட எழுந்ததே நாச்சியாரது திருப்பாவை என்பதும்) திருவாசகத்துக் குயிற்பத்தின் பிற்பட எழுந்ததே 'மன்னு பெரும்புகழ்' என்னும் பெயர்புனையப் பட்ட நாச்சியா ரது குயிற்பத்து என்பதும் உய்த்துணர்ந்து கொள்க.

இதுகாறும், மணிவாசகனார் ஒன்பதாம் நூற்றாண்டின் ஒப் பற்றிலங்கிய அப்பெருஞ் சிறப்பின் வரகுண பாண்டியன் காலத் தவரா மெனவும், பெரியாழ்வார் சென்னைப் பொருட் காட்சிச் சாலைச் செப்புப் பட்டயத்து நெடுஞ் சடையன் காலத்தவரா மெனவும் வைத்தோது மவர்சார்பினின்று நோக்கினும் மணி வாசகனார் பெரியாழ்வார்க்கு முற்பட்டவரா யிலங்குமாறு அச் செப்புப் பட்டயத்தின் காலங் காட்டு முகத்தான் விளங்கக் காட்டினேம். இனி மணிவாசகனார் ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத் துலகு புரந்தருளிய 'பெரிய அன்பின் வரகுண தேவர்' காலத்தவரா மென்பாரது பக்கம் புரை படுமாறும், மற்றதனுன் மணிவாசகனார் இன்னும் பெரிதும் முற்பட்டவ ராமாறும் தெளித்துரைத்துப் பின் பெரியாழ்வார் தொடக்கத்து வைணவப் பெரியார் சிலர் தம் காலமாமா றிதுவெனக் காட்டுதும். (தொடரும்)

பாரிப்பாக்கம் கண்ணப்ப முதலியார்.

தமிழ்ப்புலவர்.

# திருநெல்வேலிப் பொற்றாமரைத் தீர்த்தம்

திருநெல்வேலி, பாண்டிநாட்டிலேயுள்ள பாடல்பெற்ற தலங்கள் பதினான்கனுள் ஒருதலம். இதற்குத் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அருளிச்செய்த திருப்பதிக மொன்றுமட்டும் இப்பொழுது உள்ளது. திருநாவுக்கரசு நாயனாரும், சுந்தரமூர்த்தி நாயனாரும், சேரமான் பெருமாநாயனாரும் இத்தலத்திற் கெழுந்தருளி வணங்கிச் சென்றார்கள்.

"அங்குறைந்து கண்ணுதலா ரருள்சூடி யகன்றுபோய்ப்
பொங்கு தமிழ்த் திருநாட்டுப் புறம்பணைசூழ் நெல்வேலி
செங்கண்விடை யார்மன்னுந் திருக்கானப் பேர்முதலா
வெங்குநிகழ் தானங்க ளெல்லாம்புக் கிறைஞ்சுவார்"

(பெரிய புராணம். திருநாவு. ௨௧௦)

"குற்றாலத் தினிதமர்ந்த கூத்தர்குரை கழல்வணங்கிச்
சொற்றாம மலர்புனைந்து குறும்பலாத் தொழுதிப்பான்
முற்றாவெண் மதிமுடிவார் பதிபணிந்து பூவேயில்கள்
சேற்றார்மன் னியசெல்வத் திருநெல்வே லியையணைந்தார்."

"நெல்வேலி நீற்றழகர் தமைப்பணிந்து பாடிநிகழ்
பல்வேறு பதிபிறவும் பணிந்தன்பால் வந்தணைந்தார்
வில்வேட ராய்வென்றி விசயனெதிர் பன்றிப்பின்
செல்வேத முதல்வரமர் திருவிராமேச்சரத்து."

(பெரியபுராணம். சேரமான். ௧௦எ, ௧௦அ.)

நின்ற சீர் நெடுமாற நாயனார் தம்மைப் போரேற்றுவந்த வடபுலத்து மன்னரை வென்று வாகைபுனைந்து இத்தலத்தில் பலதிருப்பணிகள் செய்தார்.

"நிறைகொண்ட சிந்தையா னெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன்"

(திருத்தொண்டத்தொகை. அ.)

" வளவர்பிரான் றிருமகளார் மங்கையருக் கரசியார்
களபமணி முலைதிளைக்குந் தடமார்பிற் கவுரியனா
ரிளவரவென் பிறையணிந்தார்க் கேற்றதிருத் தொண்டெல்லா
மளவில்புகழ் பெறவிளக்கி யருள்பெருக வரசளித்தார் "

(பெரியபுராணம். நின்றசீர்-அ.)

திருவிசைப்பாப் பாடியருளிய நாயன்மார்கள் ஒன்பதின் மருள் ஒருவராகிய கருவூர்ச்சித்தர் தமது கீரனூரினின்றும் புறப் பட்டுப் பல சிவதலங்களையும் பணிந்து செல்வார் இத்தலத் தெய்திச் சிவபிரானையழைக்கச் சிவபிரான் வாளா இருக்க 'எருக்கு எழ: ஈசனிங்கே இல்லை' என்று சாபமிட்டுச் சென்றார். அஃதுணர்ந்த சிவபிரான் சித்தர்பின் சென்று மானூரம்பலத்திற் காட்சிகொடுத்துமீளச் சித்தரும் இத்தலத்திற்கு உடன் வந்து 'எருக்குஅற: ஈசன் இங்கே யுளன்' என்று சாபநீக்கி ஒவ் வோராண்டிலும் ஆவணி மூலத்தில் இக்காட்சியை மானூரில் காட்டியருளுமாறு அடிக்கு ஆயிரம்பொன் கொடுத்தருளினார். இது திருநெல்வேலிப்புராணத்திற் கண்டது: ஆவணியுற்சவத் திற் பண்டுதொட்டு நிகழ்வது.

இத்துணைப் பெருமைவாய்ந்த இத்தலத்திலேயுள்ள தீர்த் தங்கள் முப்பத்திரண்டாம். அவற்றுள் ஆலய வெல்லைக்கு ளிருக்குந் தீர்த்தங்கள் பலவற்றினுஞ் சிறந்து விளங்குவது பொற்றாமரைத் தீர்த்தம். இஃது உலகமாதாவாகிய காந்திமதி யம்மையாரின் சந்நிதியிலுள்ள தத்துவப்பிரகாச மண்டபத் தின் வடபாலுள்ளது. இத் தீர்த்தத்தைச் சுற்றி நாற்புறமும் தொடர்ச்சியான மண்டப மொன்றிருந்தது. இப்பொழுது அதன் வடபாலும் கீழ்பாலும் தென்பாலிற் கீழ்பாதியிலும் உள்ள மண்டபப் பகுதிகள் செப்பனிடுவதற்காக அப்புறப்படுத் தப்பட் டிருக்கின்றன. இப்பகுதிகளிலே சிலாசாசனங்கள் பல விருந்தன. தர்மகர்த்தர்கள் அவற்றிற்குப் பிரதி யெடுத்து வைத்திருப்பார்களென்பதே எமது நம்பிக்கை. மீளவும் புதிய மண்டபங் கட்டப்பட்டதும் அதில் அச்சாசனங்களை யெழுதி விடல் வேண்டுமென்று அவர்களைக் கேட்டுக்கொள்கிறோம்.

இப் பொற்றாமரையின் நடுவிலுள்ள மண்டபம் மிக்க அழகு வாய்ந்தது. இத்தீர்த்தம் சதுரவடிவி லமைந்திருக்கின்றது. மகோற்சவத்தின் முடிவிலும் சாதாரண அமாவாசை முதலிய காலங்களிலும் சிவபெருமான் இங்கேதான் தீர்த்தங் கொடுத் தருளுவார். மார்கழி யுற்சவத்தின் ஏழாம் நாளில் மாணிக்க வாசக சுவாமிகள் திருவெம்பாவைபாட மனோன்மணி யம்மை யார் இங்கே நீராடியருளுவர். மாசி மகத்தில் திருநாவுக்கரசு நாயனார் தம்மைச் சமணர்கள் கல்லிலே கட்டி கடலிலெறிந்ததி னின்றும் பிழைத்ததன் அடையாளமாக அந்நாயனார்க்குத் தெப் பத்திருநாள் இத்தீர்த்தத்தில் நடைபெறும்.

சிருட்டியின் முற்பொழுதிலே சிவபெருமான் பிரமனையும் திருமாலையும் படைத்து அவர்கட்கு முறையே படைப்பும் காப்புமாகிய தொழில்களை யருளினர். பிரமதேவர் செருக்குக் கொண்டமையால் அவருக்கு அத்தொழில் கைவராது போயிற்று. அதுகண்ட பிரமதேவர் இப்பொற்றாமரைத் தீர்த் தத்தையடைந்து அதன் கரையில் பதினாயிரம் வருடங் கடுந் தவம் புரிந்தார். அப்பொழுது சிவபெருமான் அத்தீர்த்தத்தி னின்று பொன் அன்னமாகித் தோன்றிக் காட்சிகொடுத்தும், பின் தக்ஷிணாமூர்த்தியாய் அவருக்குச் சிருட்டித்தொழில் கை வருமாறு உபதேசித்தும் அப்பால் நீர்வடிவமாய் அத்தீர்த்தத் துள் மறைந்தனர். இதனாலே இத்தீர்த்தம் ஏமபுட்கரணி யென வடமொழியிலும் பொற்றாமரைத் தீர்த்தமெனத் தமிழி லும் வழங்கப்படுவதாயிற்று. இவ்வரலாறு தலபுராணத்திற் கூறப்பட்டது.

(தொடரும்)

வி. சிதம்பரராமலிங்க பிள்ளை.

---

# அரியதோர் ஆங்கிலச் செய்யுள்

"God is a Father,
Man is a brother,
Life is a mission and not a career,
Dominion is service,
Its sceptre is gladness,
The last is the greatest
Saving is dying
Giving is living
Life is eternal and love is its crown"

(Owen Lovejoy)

ஆண்டவ னொருபிதா, அனைவருஞ் சோதரர்;
ஈண்டுயிர் வாழ்வ தெழும்புல இன்பிற்கன்று;
ஏமுறு செம்பொரு ளியலுணர்ந் தொன்றற்கு;
ஆம்பெரும் ஆளுகை அடித்தொண்டாற்றல்;
ஆட்சியின் செங்கோல் அன்பின் களிப்பே;
மாட்சியிற் சிறந்தோர் மாணப் பணிபவர்;
இடாதோ ரிறந்தோர், இடுநரே வாழ்வோர்;
விடா இருப் பினதுயிர் வியன்பயன் அன்பே.

ச. சச்சிதானந்தம் பிள்ளை B.A., L.T.

---

# குறிப்புக்கள்

---

## வாழ்நாள் கையொப்பம்

தேவகோட்டை, திரு. பெ. பழனியப்பச் செட்டியாரவர்கள் நமது செந்தமிழ்ச் செல்விக்கு வாழ்நாள் கையொப்பத் தொகையினை யனுப்பி முன்மாதிரிகாட்டி 'தமிழையும் சமயத்தை'யும் ஆதரிக்க முன் வந்திருப்பதற்காக இக்கழகத்தார் மனமுவந்து நன்றிபாராட்டுகிறார்கள். இதுபோல் அன்பர் பலர் முன்வரின் நமது தமிழ்நாடு பண்டை உயர்நிலைக்கு வருமென்பதில் ஐயமுண்டோ? இல்லை! இல்லை!!

## மாதவச் சிவஞான சுவாமிகளைப் பற்றிய மாணறிவுறூஉ.

இப் பெரியார் தம் மாணவர்க்குக் கற்பிக்கின்ற காலையினும், பொதுப்படச் சொற்பொழிவு நிகழ்த்துகின்ற நேரத்தினும் இவர்களது திரு முன்னே இரு பீடங்களில் ஒன்றின்மேல் திருவிளையாடற் புராணமும் மற்றதின்மீது பெரிய புராணமும் இருக்குமாறு கொண்டேதான் தாம் அருளுரை புரிவாராம். இவர்களது முடியில் நால்வர் நான்மணி மாலை யேட்டுச்சுவடி முடியப் பெற்றிருக்குமாம்.

இவைகொண்டு நாம் அறியற்பாலன: இவ்வரும் பெரும் யோகியார் அம் மூன்று நூல்களினிடத்தும் எத்துணை பேரன்பு வைத்து அவற்றைப் பாராட்டி யிருந்தனர் என்பதூஉம், அம் மூந்நூற்களின் பொருள்கள் சைவமக்கள் எக்காலத்தும் போற்றி வாழ்தற்குப் போதிய வென்பதூஉம் ஆம்.

இச்செய்தி திருவாதவூரடிகள்புராண விருத்தியுரையாசிரியர் திருவாளர் ம. க. வேற்பிள்ளை யவர்கள் செவியுற்று இவர்களால் சிதம்பரத்தில் திரு. ச. சச்சிதானந்தம்பிள்ளை யவர்கள் உரைக்க வுணரப்பட்ட தென்பது தேற்றம்.

---

## திருநெல்வேலி சைவ சித்தாந்த சங்கம்.

இச்சங்கத்தின் மூன்றாம் ஆண்டு நிறைவு விழா நாளது தைத்திங்கள் 27, 28 தேதிகளில் இவ்வூர் தெப்பக்குளத்தெரு, தாயம்மை யம்மாள் பெண்கல்விச் சாலையில் அமைக்கப்பெற்ற கொட்டகையின்கண்ணே நடைபெற்றது. அக்கூட்டத்திற்கு அம்பா சமுத்திரம், தாலூகா போர்டு தலைவரும், பிரபல வழக்கறிஞரும், தமிழ்ச் சிவஞான போத உபந்நியாச பாட நூலாசிரியருமான திருவாளர் V. P. காந்திமதிநாதபிள்ளை யவர்கள் B.A., தலைமை பூண்டார்கள்.

முதல் நாள் காலையில் மறைத்திருவன் சுந்தர ஓதுவா மூர்த்தி அவர்கள் இன்னிசைக் கருவிகளுடன் தமிழ் மறை யோதி வீதி வலம் வந்தார்கள். அன்று மாலை 4-மணிக்கு தமிழ் மறை ஓதப்பெற்று சபை தொடங்கிற்று. பின்னர், தலைவரவர்கட்கு வரவேற்புத்தாள் படித்தபின், அமைச்சரவர்கள் சங்கத்தின் ஆண்டறிக்கையைப் படித்தார்கள். அதன்

பின் தலைவரவர்கள் முன்னுரை கூறும் வாயிலாக இச்சங்கம் செய்து வரும் அரிய வேலைகளையும், அமைச்சர்கள் ஊக்கத்தோடும் உண்மையோடும் உழைத்துவருந் தன்மைகளையும், வியாபார முறையோடு தமிழ் வளர்ச்சி சமய வளர்ச்சி ஆகிய இவைகட்கு இக்கழகத்தார் செய்துவரும் அறச்செயல்களின் திறத்தையும் மிக வியந்து பாராட்டிப் பேசியதோடு 'அன்பும் சிவமும்' என்னும் பொருள்பற்றியும் விரிந்த கருத்தமைந்த சிறிய சொற்களால் மிக இனிதே பேசினார்கள். பின்னர் 'மெய்கண்ட தேவர்' 'சங்க நூல்கள்' 'இளமையிற் கல்' 'ஆண்டா னடிமைத் தொடர்பு' 'உண்மை' என்னும் பொருள்கள் பற்றி திரு. வி. சிதம்பர ராமலிங்கம் பிள்ளையவர்கள், திரு. P. C. புன்னைவனநாத முதலியாரவர்கள், ஸ்ரீமதி சண்முக சுந்தரத்தம்மாள், திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள் B. A., திரு. T. P. வேலாயுதம் பிள்ளையவர்கள் B.A., B.L., இவர்கள் முறையே இனிய சொற் பொழிவுகள் நிகழ்த்தினார்கள். அதன் பின் தலைவரவர்கள் முடிவுரை கூறும் வாயிலாக ஒவ்வொரு சொற் பொழிவுகளின் சாரத்தை நயம்பட விளக்கிச் சபையாரைப் பெரிதும் மகிழ்வித்தார்கள். பின் தமிழ்மறை ஓதி அன்று சபை கலைந்தது.

இரண்டாம் நாள் (10-2-24) ஞாயிற்றுக்கிழமை யன்று 3-30-மணிக்குத் தமிழ்மறை ஓதப்பெற்று சபை தொடங்கிற்று. அப்பொழுது ஸ்ரீலஸ்ரீ இலக்குமணப் போற்றியவர்கள் 'பெரிய புராணத்தின் பெருமை' என்னும் பொருள்பற்றி அரியதொரு சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். பின்னர், திருக்குறள் பயின்ற மாணவர் மாணவிகளைப் பரிசோதனை செய்து பல பள்ளிக்கூடத்து மாணவர், மாணவிகளில் 47 பேர்கட்குப் பரிசும், தேவாரம் பண்ணோடோதிய இரு மாணவிகட்குப் பரிசும் இச்சங்கத்தாரால் அளிக்கப்பட்டன. அதன்பின், திரு. R. P. சேதுப்பிள்ளையவர்கள் B.A., B.L., சாத்தூர் திரு. T. S. கந்தசாமி முதலியாரவர்கள் B.A., தூத்துக்குடி திரு. ந. சிவகுருநாதபிள்ளையவர்கள் ஆகிய மூவரும் முறையே 'சிலப்பதிகாரம்' 'தமிழ்ச்சொல்லாக்கம்' 'சைவ சித்தாந்தம்' என்னும் பொருள்கள் பற்றி இனிய சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். பின் 'சில தீர்மானங்கள்' சபையாரால் அங்கீகரிக்கப்பெற்று நிறைவேறியதும் தலைவரவர்கள் முன் நடந்த சொற்பொழிவுகளில் உள்ள நுட்பங்களை எடுத்து விளக்கியதோடு சித்தாந்தத்தின் பெருமையை 'பசுமரத்தாணி யறைந்தாற்போல' கேட்போர் உள்ளத்திற் பதியுமாறு மிகத் தெளிவாயும் நயமாயும் பேசிச் சபையாரையெல்லாம் சைவ சித்தாந்தக் கடலுள் மூழ்கும்படி செய்தார்கள். பின் தேவாரமோதி சபை கலைந்தது.

பின் 29-ம் நாள் (11-2-24) திங்கட்கிழமை மாலை 6-மணிக்கு திருநெல்வேலி, கீழரத வீதி, ஷை சங்கக் கட்டிட மேடையில் ச...தூர்த் தமிழ்ச்சங்க அமைச்சரும், வழக்கறிஞருமாகிய திருவாளர் T. S. கந்தசாமி முதலியாரவர்கள் B. A., 'சுந்தரமூர்த்தி சுவாமிகளின் சரித்திர ஆராய்ச்சி' என்னும் பொருள்பற்றி ஓர் அரிய சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அதில் சேக்கிழார் திருவாக்குக்கள் ஒவ்வொன்றற்கும் தேவாரத்தில் இயைபு இருக்கிறதென்பதைப் பலரும் வியந்து பாராட்டும் வண்ணம் எடுத்துக் காட்டினார்கள். ஆதலால் இவ்வகை ஆராய்ச்சியே இக்காலத்திற்கு உரியனவெனப் பலரும் வியந்து போற்றினார்கள்.

கண்டதை விண்டோன்.

---

## மதிப்புரை

பிரசங்க ரத்தினதீபம் என்னும் முதற்பகுதிப் பதிப்பொன்று யாழ்ப்பாணத்து உடுவில் தமிழ்ப்புலவர் திருவாளர் வ. மு. இரத்தினேசுவையர் அவர்களால் ஆக்கப்பட்டுளது. இதனாசிரியர் அமயந்தோறும் உரை நிகழ்த்திய ஆறு அரும்பொருள்களை புத்தகவடிவில் தமிழ்மக்களுக்கு அளித்திருக்கின்றார். அவ் வாறுபொருள்களைப் பற்றி, பல தென்மொழி வடமொழி நூல்களிலிருந்து மேற்கோள்களை ஆண்டிருப்பதும் அப்பொருள்களை விளங்கவைத்திருப்பதும் சைவசமய வாராய்ச்சிக்குத் துணையாகும். சமயம், முதற்பொருள், நாம் யார், மும்மல முகிழ்ப்பு, மனிதப்பிறப்பின் மகிமை, சிவபூஜை யென்றுஞ் சீரிய இன்பமே என்பவற்றைப் பற்றி இந்நூல் கூடியமட்டும் விளக்கி வருகிறது. இதன் விலை அணா எட்டு.

தமிழரசு என்னும் பெயரிய ஒரு தமிழ் மாதாந்தப் பத்திரிகை மதுரையிலிருந்து வெளிவருகிறது. அதன் 3 ஆம் இதழ் எமது பார்வைக்கெட்டியது. இதில் நீதி, சங்கீதம், முத்திபெற்ற பெரியார் சரித்திரம், விநோதம் வைத்தியக் குறிப்பு; நவீனகம் முதலிய பல பொருள்களைத் தன்னகத்தேகொண்டு கற்போருக்கு மகிழ்வை விளைவிக்கத்தக்கதாயுளது. இதன் ஆசிரியர் திருவாளர் சு. ஸ்ரீநிவாசய்யங்கார் அவர்கள். திரு. வேம்பத்தூர். பி. பாஸ்கரய்யர் அவர்கள் பொறுப்பாளராவர். இதன் வருடசந்தா ரூ. 2.

---

Printed at the 'Sivakami Vilasam' Press, & Published by
V. Subbiah for the S. I. S. S. W. P. Society Ltd, Madras.